மலர் - 1 இதழ் - 10



# தமிழணங்கு

(தமிழராய் இணைவோம்)

இலக்கியம், சமயம், பண்பாட்டு ஆய்விதழ்
ஏப்ரல் 2023
தனிச்சுற்றுக்கு மட்டும்
ஆசிரியர்: முனைவர் திருமதி செ. இராஜேஸ்வரி

முத்தமிழ் விரும்பியின் உன்னோடு உரையாடுதல்
வழக்கறிஞர், கவிஞர் கனிமொழி

அண்ணல் அம்பேத்கர் எழுத்தும் பேச்சும்
முனைவர் தேமொழி

தமிழரின் பாரம்பரிய உணவுப் பண்பாடு
முனைவர் ச. சீனிவாசன்

எம்.ஜி.ஆர். தத்துவப் பாடல்களின் தன்னம்பிக்கைக் கருத்துக்கள்
இரவி சொக்கலிங்கம்

தமிழ்ச் சித்தரியலும் சிதத்த் ரியலும் கிறிஸ்தியமும் – III
பேரா.முனைவர் மோ. மைக்கேல் பாரடே

சட்டக் கலைச் சொல்லாக்கம் மொழி வளர்ச்சியும் கலைச் சொல்லாக்கமும்
பேரா. மு. முத்துவேலு

வாணிதாசன் கவிதை மாட்சி
ஆனைவாரியார் முனைவர் ஆனந்தன்

மதுரையும் மருதமும்
கார்த்திகேயன் பார்கவிதை

எளிய முறையில் யாப்பறிவோம்!
நெருப்பலையார் இராம. இளங்கோவன்

பதிற்றுப் பத்து
அன்பு ஜெயா

அறம்செய் அருகன்?
முனைவர் சிவ. இளங்கோ

கொற்றவை
முனைவர் ப. தேவி அறிவுச் செல்வம்



இன்னும் பல...

அன்பளிப்பு உரூபாய்: 120/-

தமிழர் இலக்கிய சமய பண்பாட்டு ஆய்விதழ்

# தமிழணங்கு

(தமிழராய் இணைவோம்)

*மலர்-1*    *ஏப்ரல்– 2023*    *இதழ்-10*



*தனி இதழ் ............................................. ரூ 120*
*அரையாண்டு சந்தா ............................. ரூ 600*
*ஆண்டு சந்தா......................................... ரூ 1200*

Google Pay / Phone Pay *மூலம் செலுத்த*
*+91 7010997639*

**Thamizhanangu**

Printed & Published by
E. Satish Rajkumar (Advocate)
3/422, Thiruvalluvar Street,
Dinamani Nagar, Madurai,
Tamil Nadu 625 018.
Ph: +91 7871123226, +91 7010997639

*கட்டுரைகள் அனுப்புவோர்*

rajetamiljuly1@gmail.com
thamizhanangu1@gmail.com *க்கு அனுப்பவும்*



## தமிழின் சிறப்பு

செந்தமிழே வணக்கம்
ஆதி திராவிடர் வாழ்வினை
சீரோடு விளக்கும்
செந்தமிழே வணக்கம்
ஆதி திராவிடர் வாழ்வினை
சீரோடு விளக்கும்
செந்தமிழே வணக்கம்

ஐந்து இலக்கணங்கள்
ஆய்ந்தே.
ஐந்து இலக்கணங்கள் ஆய்ந்தே
உலக அரங்கினுக்கே முதன் முதல்
நீ தந்ததாலும்
அரங்கினுக்கே முதன் முதல்
நீ தந்ததாலும்
செந்தமிழே வணக்கம்

மக்களின் உள்ளமே கோயில்
என்ற மாசற்ற
கொள்கையில் வாழ்ந்ததனாலே

பெற்ற அன்னை தந்தை அன்றி
பெற்ற அன்னை தந்தை
அன்றி மேலாய்
பிறிதொரு தெய்வம்
இல்லை என்பதாலே
செந்தமிழே வணக்கம்

ஜாதி சமயங்கள் இல்லா
ஜாதி சமயங்கள் இல்லா நல்ல
சட்ட அமைப்பினை கொண்டே

நீதி நெறி வழி கண்டாய்
நீதி நெறி வழி கண்டாய் எங்கள்
நெஞ்சிலும் வாழ்விலும்
ஒன்றாகி நின்றாய்
செந்தமிழே வணக்கம்

- கவிஞர் முத்துக் கூத்தன்

# உள்ளடக்கம்

# *தமிழ்ச் சித்தரியலும் சிதத்த் ரியலும் கிறிஸ்தியமும் - III*

**பேரா.முனைவர் மோ. மைக்கேல் பாரடே**
*மேனாள் தமிழ்த்துறைத்தலைவர்*
*சென்னைக் கிறித்தவக் கல்லூரி, தாம்பரம்*



*தமிழ்ச் சித்தர்களது இறைநெறிக் கோட்பாடுகளையும் பிற சமுதாயச் சீர்திருத்தச் சிந்தனைகளையும் கிறித்தவ மறைநூலான விவிலியத்தின் கோட்பாடுகளோடும் கொள்கைகளோடும் ஒப்பிட்டு ஆயும் இந்த கட்டுரைத் தொடரின் மூன்றாவது பகுதியாக இக்கட்டுரை அமைகிறது. கடந்த இதழில், பொதுவாக சித்தர்களுக்கும் விவிலியத்துக்கும் இடையமைந்த உருவ வணக்க மறுப்பு, சாதி பேத மறுப்பு, ஆகம வேத சாத்திர மறுப்பு, பிறவிச்சுழற்சி மறுப்பு, குரு வணக்க நெறி, அன்பு நெறியே இறை நெறி என உணர்தல் போன்ற பொதுக்கருத்துகளையும் கோட்பாடுகளையும் சுட்டி அவற்றுள்ளும் சிறப்பாக மனித உடலின் தோற்றம், மனித யாக்கையின் சிறுமையும் பெருமையும் ஆகிய பொருண்மைகள் பற்றி இரு பேரிலக்கியங்களிலும் வெளிப்படும் ஒத்த கருத்துகள் பற்றி விவாதிக்கப்பட்டது. சிறப்பாக, மனித உடலின் நிலையாமையைப் பற்றி, ஒரு மட்பாண்டத்துக்கு ஒப்பிட்டு, இரு பேரிலக்கியங்களும் பேசுவது எடுத்துரைக்கப்பட்டது. இவ்வுடலின் நிலையாமை பற்றி மட்டுமல்ல, இவ்வுடலை மனிதர் பேண வேண்டிய முறையில் பேணாமை பற்றியும் பேசப்பட்டது. மனித உடலின் சிறுமை அல்லது நிலையாமை பற்றிப் பேசும் அதே நேரத்தில், இரு பேரிலக்கியங்கள் மனித உடலின் மாண்பு பற்றியும், மனித உடலுள் உறையும் தெய்வீகத்தன்மை பற்றியும் பேசுவதைப் பற்றி விளக்கப்பட்டது. மனித உடலை இறைவனின் ஆலயமாகப் போற்றிப் பேண வேண்டுவது பற்றி இரு பேரிலக்கியங்களும் சுட்டுவதும் விதந்தோதப்பட்டது. இதற்கான அகச்சான்றுகள், விவிலிய மறைநூலிலிருந்தும், பாம்பாட்டிச் சித்தர், திருமூலர், கடுவெளிச்சித்தர் பாடல்களிலிருந்தும் எடுத்துக் காட்டப்பட்டன. இனி, இக்கட்டுரையில், சித்தர் இலக்கியங்களின் மையக் கோட்பாடான குரு வணக்கம் பற்றிய செய்திகள், கிறித்தவ மறை கூறும் கருத்துகளோடு ஒன்றுபடுவது பற்றி விவாதிக்க முற்படுவோம்.*

### சித்தர்க்கள் பேசும் குரு மார்க்கம்

*அடிப்படையில் சித்த மார்க்கம் என்பது குரு மார்க்கம் என்றே அறிஞர்களால்அடையாளம் காணப்படுவதாகும். இறையனுபவம் பெற விழையும் ஆன்ம சாதகன் ஒருவன், குரு ஒருவரை நாடி, அவரால் ஞானம் உணர்த்தப்பெற்றாலன்றி, உய்தி அடைய வியலாது என்பது சித்தர் பாடல்கள் உணர்த்தும் ஒரு முக்கிய கொள்கையாகும். மேலும், சித்த நெறிப் பெரும்பாலும்*

யோக நெறி. அது குருவொருவர் வழி நின்று உணர்தலாகும். மேலும், சித்தர் பாடல்களில் மெய்க் குருவின் பண்புகள் எவை, பொய்க்குருக்களின் கேடுகள் எவை என்பனவெல்லாம் தெள்ளத்தெளிவாக எடுத்துரைக்கப்படுகின்றன. வால்மீகர் ஞானம், அகத்தியர் ஞானம், சுப்பிரமணியம் ஞானம் முதலிய பாடல்களில் பொய்க்குருக்கள் பற்றியும், குரு வணக்கத்தை விரித்துப் பாடும் பாம்பாட்டிச் சித்தர் பாடல்களில் மெய்க்குருவின் மேன்மைகள் பற்றியும் பற்பல செய்திகள் பேசப்படுகின்றன. இறைவனே குருவாக வந்து, அருள் செய்து ஞான ஒளி தருவதைச் சில பாடல்கள் உணர்த்துகின்றன. சான்றாக, 'ஆசானும் ஈசானும் ஒன்றேயாகும்' என்றும், 'ஈசனை ஆசானாய்க் காணும் பேர்கள் இன்பமுடன் கயிலாயம் எய்தலாம்' என்றும் திருமூலர் பாடுகின்றார். 'மாநிலத்தையே ஒரு நொடியில் வகுத்த ஜெகஜோதியை வணங்கி, அவரை அண்டிக் கொள்ள வேண்டும்' என்று அகத்தியர் ஞானம் பேசுகிறது.

இவ்வாறான செய்திகளில் இறைவனையே குருவாக உணர்தலும் இறைவனைக் குரு வழி உணர்தலும், மெய்க்குருக்களும் பொய்க்குருக்களுமான மனித குருக்கள் பற்றியும், பலபடப் பேசப்படுவதைச் சித்தர் இலக்கியங்களில் காண்கிறோம்.



**விவிலியம் பேசும் குரு வணக்க்க நெறிகள்**

இதுபோலவே, கிறித்தவ மறைநூலான விவிலியமும் கடவுளைப் போதிக்கும் குருவாகவும், குருக்கள் அல்லது இறைப்பணியாற்றும் ஆசாரியர்கள் கடவுளைப் போதிக்கும் முறைமைகள் பற்றியும் வெளிப்படுத்துகிறது. கிறித்தவக் கோட்பாட்டின்படி, தந்தை, மைந்தர், தூய ஆவியார் என மூவொருமைக்

கோட்பாட்டில் பேசப்படும் இறைத்தன்மையில், தெய்வீகத்தின் இம்மூவருமே தம் அடியவர்க்குப் போதிப்பவர்களாகவே காட்டப்படுகின்றனர். தந்தையாம் கடவுள் தம் அடியவர்க்குப் போதித்து உணர்த்துவது பற்றி, பழைய ஏற்பாட்டு நூல்களில் ஏராளமான சான்றுகள் இடம்பெறுகின்றன. தூய ஆவியார், போதிக்கும் இறை ஆற்றலாகவே வடிவமைத்துக் காட்டப்படுகிறார். அவரது முக்கியத் திருப்பணியே, அடியார்க்கு இறை உண்மைகளைப் போதித்து, அவற்றுள் அவர்களை உறுதிப்படுத்தி, இறைநெறி சார்ந்த வாழ்வு வாழ ஆற்றல்படுத்துவதே ஆகும். இதனை இயேசு பெருமானே தமது போதனைகளிலும், இயேசுவின் பின்னடியாரும் தமது போதனைகளிலும் உணர்த்தியுள்ளனர். சான்றாக, யோவான் நற்செய்தி நூல் 16:12-13 மற்றும் யோவான் தூதுவரின் முதற் கடிதம் 2:27 ஆகிய திருவாக்கியங்களைக் காண்க.

இயேசு கிறிஸ்துவை அவர் வாழ்ந்த காலத்தும் ஏன் தற்போதும்கூட இறையாற்றல் நிறைந்த கடவுட் குமாரனாக ஏற்காதவர்களும், அரிய ஆன்மீக உண்மைகளைப் போதிக்கும் ஞான குருவாக ஏற்கின்றனர் என்பதை அனைவரும் அறிவோம். உலகில் தோன்றிய ஞான ஆசான்களில் தலைசிறந்தவராக, இயேசு கிறிஸ்துவைச் சமய வேறுபாடின்றி அனைவரும் ஒப்பி ஏற்பது கண்கூடு. இயேசு வாழ்ந்த காலத்தில், அவரைப் பல தடைகட்கும் எதிர்ப்புகளுக்கும் இடையில், நிக்கொதேமு என்ற மாபெரும் யூத மறை நூலறிஞனும் உயர் அரசு அலுவலனுமாகிய ஒருவன் இரவு நேரத்தில் சந்தித்து, 'நீர் கடவுளிடமிருந்து புறப்பட்டு வந்த மாபெரும் ஆசான்' என்று போற்றிப்புகழ்ந்து, பல ஐயங்களைக் கேட்டுத் தெளிவதை யோவான் நற்செய்தி நூல் 3:2 இல் படிக்கிறோம். இயேசுவை அவர் வாழ்ந்த காலத்து மக்கள் 'ரபீ'' (போதகர் அல்லது குரு) என்ற சொல்லாலேயே அழைத்தனர். இயேசுவின் வகை வகையான - தொகை தொகையான மாணாக்கர்களைப் (சீடர்களைப்) பற்றியும் நாம் நற்செய்தி நூல்களில் பரக்கக் காண்கிறோம். இவற்றுக்கெல்லாம் தலையாக, இயேசு



கிறிஸ்துவே 'இறைவனிடமிருந்து புறப்பட்டு வந்த கிறிஸ்துவாகிய தாமே மெய்யான குரு என்றும், பிறர் எவரையும் குரு என அழைக்க வேண்டாம்'' எனவும் அதிரடியாக பிரகடனம் செய்ததை மத்தேயு நற்செய்தி நூல் 23:8-10 திருவாக்கியங்களில் படிக்கிறோம். இவ்வாறாக, விவிலியமும் கடவுளைக் குருவாகக் காட்டுவதையும் அதே நேரம் மனிதக் குருக்கள் கடவுளின் பணியாளர்களாகக் கடவுளை மக்களுக்குக் காட்டி, கடவுளிடம் மக்களை வழி நடத்த

*வேண்டிய பொறுப்பினில் உள்ளமையையும் விவிலியம் சுட்டிக்காட்டுவதையும் நாம் ஏராளமான சான்றுகளில் காணலாம்.*

**பொய்க்குருக்களின் பொய்மைகளும் சூதுகளும்**

*மேற்குறித்த வண்ணம், இரு பேரிலக்கியங்களும், குருமார்க்கம் பற்றியும் குரு வணக்கம் பற்றியும் மெய்க்குருக்களின் மேன்மைகள் பற்றியும் பொய்க்குருக்களின் கேடுகள் பற்றியும் பலபடப் பேசுவதை இருபேரிலக்கியங்களிலும் இருந்து எண்ணற்ற சான்றுகளால் எடுத்துக்காட்டலாம். கட்டுரையின் அளவு கருதி, இக்கட்டுரையில், பொய்க்குருக்களை இனம் காட்டி, இருபேரிலக்கியங்களும் எச்சரிப்பது பற்றி மட்டும் காண்போம். குரு மார்க்கம் பற்றிய பிற செய்திகளைத் தொடர்ந்து வரும் இயல்களில் காண்போம்.*



**பொய்க்குருக்க்களைப் பற்றி இயேசு பெருமானும், அவரது மெய்ய்யடியாரும் விடுத்த எச்சரிப்புகள்**

*இயேசு பெருமானே, தம்மைப் பின்பற்றுவோரிடம் பொய்க்குருக்களைப் பற்றியும் போலிப் போதகர்கள் பற்றியும் எச்சரிப்பாக இருக்குமாறு பலமுறை அறிவுறுத்துகிறார். 'சமயக்குருக்களிடம் எச்சரிக்கையாயிருங்கள். அவர்கள் நீண்ட அங்கி தரித்து நடமாட விரும்புகின்றார்கள். பொது இடங்களில் வணக்கத்தையும் செபக் கூடங்களில் முதல் இருக்கைகளையும் விருந்துகளில் முதல் இடங்களையும் பெற ஆசிக்கிறார்கள். கைம்பெண்களின் உடைமைகளை விழுங்குகிறார்கள். பார்வைக்கோ நீண்ட செபம் செய்கிறார்கள். இவர்கள் அதிக தண்டனைக்கு ஆளாவார்கள்'' (மத்தேயு 23:119).*

*இயேசு பெருமானின் கருத்தையொட்டிப் புதிய ஏற்பாட்டு நூல்கள் பிறவற்றின் ஆசிரியர்களும் பொய்க்குருக்கள் அல்லது பொய்ப் போதகர்களைக் கண்டித்து எழுதியுள்ளனர். தவறான போதகர்களைப் பற்றிப் புனித பவுலடிகள் தீமோத்தேயுவுக்கு எழுதுகின்றார். (ஐ தீமோத்தேயு 6:3, 4) நலமிக்க போதனைகளைப் புறக்கணித்துத் தமக்கேற்ற வகையில் நயமாகப் போதிக்கும் போதகர்களையே தேடும் மக்களைக் கண்டித்தும் பவுலடிகள் எழுதுகிறார். (ஐஐ தீமோத்தேயு 4:2-4) இயேசு பெருமானின் மூத்த மாணாக்கராகிய புனித பேதுருவும் தம் கடிதத்தில் போலிப் போதகர்களையும் போலித் தீர்க்கதரிசிகளையும் சுட்டிக்காட்டி, எச்சரித்து எழுதியுள்ளார். (ஐஐ பேதுரு 2:1-3) இவைகள் எல்லாம் பொய்க்குருக்களைக் கண்டித்தும் அவர்களிடமிருந்து விலகியொழுகுமாறு மக்களை எச்சரித்தும் எழுதப்பட்டன எனலாம்.*

**பொய்க்குருக்களை இனம் காட்டிச் சாடும் சித்தர்க்கள்**

*இவ்வாறே, சித்தர்களும் பொய்க்குருக்களைச் சாடும் பாடல்களும், அவர்களிடமிருந்து விழிப்போடு விலகி நிற்குமாறு மக்களை அறிவுறுத்தும் பாடல்களும் ஏராளமாக உள்ளன.*

**போகரின் சாடல்**

*போகரின் சத்தகாண்டம் 7000 என்ற நூலில், ஒரு பாடலில் தாமே வழிகாட்டுவதாகக் கூறிக்கொள்ளும் பொய்க்குருக்கள் கடுமையாகச் சாடப்படுகின்றனர்.*

*'கொள்ளவுமே குருப்பேய்கள் கூறுந்தன்மை
குருடருக்குக் குருடர் நெறி கூறல் போலும்
பொள்ளவுமே போகாத துயரில் மேவிப்
புகுமாறு செய்து வைப்பார் பொல்லாக்காமி'' என்பது அப்பாடல்.
இயேசு பெருமான், 'அவர்கள் குருடருக்கு வழிகாட்டுகிற குருடராய் இருக்கிறார்கள். குருடனுக்குக் குருடன் வழிகாட்டினால் இருவரும் குழியிலே விழுவார்களே'' (மத்தேயு 15:14) என்று கூறியுள்ளது இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. இதே குரலில் பட்டினத்தாரும்,*

*குருமார்க்கமில்லாத குருடருடன் கூடி
கருமார்க்கத்துள்ளே கருத்தமிழ்ந்து கெட்டேனே''*

*என்று கூறியுள்ளதும் கருதத்தக்கது.*

**ஞான வெட்டியானின் புலம்பல்**

*'ஞான வெட்டியான்'' என்ற நூலின் ஆசிரியர்,*

‘பொய்க்குருவினால் எனது பொக்கிஷமெல்லாம் சிதைந்து
கைப்பொருளெலாம் இழந்தேன் காரியக் குருக்களினால்
இப்படியாய் மேதினில் யான் சில நாள் போன பின்பு
மெய்க்குரு முனியருளால் மெய்ஞ்ஞானம் பெற்றேனே’’

என்று தன் அனுபவத்தைப் பாடியுள்ளார்.

**பாம்பாட்டியாரும் கடுவெளியாரும் தரும் எச்ச்சரிப்பும் அறிவுரையும்**

பாம்பாட்டிச் சித்தர் குரு வணக்கத்தைப் பல்வேறு கூறுகளில் மிக விரிவாகப் பாடியவர். அவரது பாடல் ஒன்றில்,

‘பொய்ம் மதங்கள் போதனைசெய் பொய்க்குருக்களைப்
புத்தி சொல்லி நன்னெறியிற் போகவிடுக்கும்
மெய்ம் மதந்தான் இன்னதென்று மேவ விளம்பும்
மெய்க்குருவைப்’’ பின்பற்றுமாறு அறிவுறுத்துகிறார்.

அவ்வாறே கடுவெளிச் சித்தரும்,

‘பொய் வேதந்தன்னைப் பாராதே, அந்தப்
போதகர் சொற்புத்தி போதவாராதே’’ என்றும்,

‘பொய்க்கலையால் நடவாதே, நல்ல
புத்தியைப்பொய்வழி தனில் நடத்தாதே’’ என்றும்

எச்சரித்துப் பாடியுள்ளார்.

**அகத்திய சித்தரின் அறச்சீற்றம்**

பொய்க்குருக்களைச் சாடுவதில் அகத்திய சித்தர் போல் வெள்ளை மொழியில் கடுமையாகப் பாடியவர் இல்லை எனலாம். சான்றுக்கு இரு பாடல்களின் சில அடிகள் மட்டும் காண்போம்.

‘தயங்காமல் பிழைப்பதற்கே இந்த ஞானம்;
சார்வாகப் பாராட்டும் ஞானம் வேறே;
மயங்குதற்கு ஞானம்பார் முன்னோர் கூடி
மாட்டினார் கதைகாவ்ய புராணமென்றும்
இயலான ரசந்தனிலீப் புகுந்தாற் போலும்
இசைத்திட்டார் சாத்திரங்க ளாறென் றேதான்
வயலான பயன்பெறவே வியாசர் தாமும்
மாட்டினார் சிவனாருத் தரவினாலே’’

*'கழிந்திடுவார் பாவத்தா லென்று சொல்லும்
கட்டியநால் வேதமறு சாத்திரங்கள்
அழிந்திடவே சொன்னதல்லால் வேறொன் றில்லை;
அதர்ம மென்றுந் தர்மமென்றும் இரண்டுண்டாக்கி
ஒழிந்திடுவா ரென்றுசொல்லிப் பிறப்புண் டென்றும்
உத்தமனாய்ப் பிறப்பனென்று முலகத் தோர்கள்
தெளிந்திடுவோர் குருக்களென்றுஞ் சீடரென்றும்
சீவனத்துக் கங்கல்லோ தெளிந்து காணே''*

*(சித்தர் பாடல்கள், பிரேமா பிரசுரம், ஆகஸ்ட் 2005, பக். 344 - 345)*




*இவ்வாறாக, விவிலிய மறைநூலும் சித்தர்களின் பாடல்களும் குருமார்க்கம் பற்றியும், குரு வணக்கம் பற்றியும் பேசுவதோடு, மெய்க்குருக்களையும் பொய்க்குருக்களையும் இனம் காட்டும் பணியிலும், மிகச் சிறப்பாக ஈடுபடுவதை இக்கட்டுரையில் சில சான்றுகளாற் கண்டோம். தொடர்ந்து இத்தலைப்பை வேறு சில கோணங்களில் தக்க அகச்சான்றுகளோடு சிந்திப்போம்.*

......தொடரும்

# முத்தமிழ் விரும்பியின் உன்னோடு உரையாடுதல்
## (முத்தமிழ் விரும்பி கவிதை நுண் ஆய்விருக்கையின் மெய்நிகர் உரை)

**கவிஞர் வழக்கறிஞர் கனிமொழி,**
*வெர்ஜினியா, அமெரிக்கா*
*பெரியார் அம்பேத்கர் படிப்பு வட்டத்தின்*
*அமெரிக்க ஒருங்கிணைப்பாளர்.*



*ஒருவர் பொறிஞராகவும் கவிஞராகவும் அறியப்படுவது என்பது இரு துருவங்கள் போன்றது. கல்லுக்குள் ஈரம் போன்றது. கவிஞர் முத்தமிழ் விரும்பி அவர்களின் இந்தக் கவிதைத் தொகுப்பு பல எண்ண ஓட்டங்களை நமக்குள் செதுக்கிச் செல்கிறது.*

*முதல் கவிதையின் தலைப்பே இந்நூலுக்கும் தலைப்பாகி உள்ளது.*

*இரண்டு மூன்று*
*சொற்கள்*
*பேசி*
*மூன்றரை நாட்களைக்*
*கடந்து விடுகிறாய்*

*ஒற்றைச் சொல்லைக்*
*கடக்க முடியாதவன்*
*ஓடம் ஏறியென்ன*

*காதலியின் ஒற்றைச் சொல் அவளை நேசிப்பவனுக்குள் ஏற்படுத்தும் தாக்கத்தை இந்தக் கவிதை அழகாய் இயம்புகிறது. அந்தச் சொல் நேர்மறையாகவும் இருக்கலாம்; எதிர்மறையாகவும் இருக்கலாம். ஆனால் சொல்லின் தாக்கம் என்னவோ ஒன்றுதான் என்பதை கவிதை கூறுவதாகவே எண்ண முடிகிறது.*

*மெல்ல உரசுகின்றன*

*மெது மெதுவாக*
*சொற்களைக் கண்டடைந்து*
*உரையாட விழைய*

*மெல்ல*
*உரசுகின்றன*
*சிக்கி முக்கிக் கற்கள்*

*தீ மூட்டலும்*
*நீராட்டலுமாய்*
*எழுந்து விரைகின்றன*
*சொற்கள்.*

*காதலர்களிடம் தொடக்கத்தில் உரையாடுவதில் உள்ள தயக்கத்தை இந்தக் கவிதையின் தொடக்க வரிகள் கூறுகின்றன. ஆனால் உரையாடுதல் தொடங்குவதில் உள்ள சிக்கல் அதைத் தொடரும்போது இருப்பதில்லை. சில சொற்கள் தீ மூட்டிக் காதலை வளர்க்கலாம், அழிக்கலாம். சில சொற்கள் இதமூட்டக் கூடியவைகளாக இருக்கலாம். இந்தக் கவிதையின் அழகை, அந்தச் சொற்கள் "காதலர்களுக்கிடையில் எழுந்து விரைகின்றன" என்ற வரியில் கவிஞர் அழகாகச் சொற்களைச் செதுக்கி உள்ளார்,*



*ஊஞ்சல் மனசு*

*இடமும் வலமும்*
*பார்க்க மட்டும்*

*முன்னும் பின்னும்*
*ஆட்டுவிக்கிறது*
*ஊஞ்சல் மனசு!*

*இறைக்க இறைக்க*
*பொங்கி வழிகிறது*
*நினைவின்*
*கேணி.*

*''தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்*

*கற்றனைத் தூறும் அறிவு''. என்ற குறளை நாம் படித்திருப்போம் , படிக்கப் படிக்க அறிவு ஊறும் என்பார் வள்ளுவர் , இவரோ அசைபோடப் போட நினைவுக் கேணி ஊறும் என்கிறார்.*

*நினைவுகள் ஊறிக் கொண்டே இருக்கும்; மனது எப்போதும் ஓரிடத்தில் நிலைப்பதில்லை; ஊஞ்சலைப் போல முன்னும் பின்னும் ஆடிக் கொண்டே இருக்கும். எப்படி இறைக்க இறைக்கக் கேணியில் நீர் ஊறுமோ அதுபோல ஆடும் மனத்தில் நினைவுகள் என ஒப்பிட்டிருப்பதுச் சிறப்பு.*



இவளை எப்படித்தான்..

தோழியும் இல்லை
தேர்ப்பாகனும் அப்படியே
தோழனுமில்லை

பாங்கனும்
ம்ஹூம்

என் அழைப்புகளை

நிராகரிக்கும்
இவளை எப்படித்தான்.

சங்க இலக்கிய மாந்தர்களை இந்தச் சிறு கவிதை நம் கண் முன் நிறுத்துகிறது. தலைவியின் நிலையைத் தோழியும் தலைவனைத் தலைவியிடத்தில் விரைந்து தேர்ப்பாகனும் சேர்ப்பர். அப்படித் தோழனும் தோழியும் பாங்கனும் இல்லாமல் தலைவியிடம் எப்படித் தான் உரையாடுவது. தன்னை நிராகரிக்கும் தலைவியை தோழி இருந்தால் சமாதனப்படுத்தித் தன்னோடு உரையாட வைப்பாளே என்ற ஏக்கத்தைப் பதிவு செய்கிறது இந்தக் கவிதை,

கண்ணதாசன் தன் பெரும்பாலான திரைப் பாடல்களில் சங்க இலக்கியச் சாரலைத் தூவியிருப்பார். “தூது செல்ல ஒரு தோழி இல்லையென துயர் கொண்டாயோ தலைவி?” என்ற பாடலை நாம் கேட்டிருப்போம். அதே போன்றதொரு போக்கினைக் கவிஞர் முத்தமிழ் விரும்பியின் இந்தக் கவிதையிலும் காணலாம்.

கைக்கு அகப்படுகிறதா என்ன?

அதிக பாதுகாப்புடனும்
அதி பத்திரமாயும்
வைக்கப்படும்
எதுவும்
காலாகாலத்தில்
கைக்கு
அகப்படுகிறதா என்ன?

உன்னைத் தான்
கேட்டு

*உறுதி கொள்ள முடியும்.*

*இந்த உணர்வைப் பலர் அனுபவத்தில் உணர்ந்திருப்போம். ஒரு பொருளைப் பத்திரமாக வைக்க வேண்டும் என எண்ணி வைக்கும் இடத்தை மறந்துவிட்டுப் பல நேரங்களில் அந்த இடத்தைத் தேடிக் கொண்டிருப்போம். இந்த இடத்தில் காதலன் தன் இதயத்திடம் கூறுவதாகவும் எண்ணிக் கொள்ளலாம்.*

*யாரும் இல்லாத நேரத்தில்*

*யாரும் இல்லாத நேரத்தில்*
*யார் மீதும்*
*கோபமில்லை*

*தன்னையே*
*நக்கிக் கொள்கிறது*

*எலும்புள் இருக்கும்*

*மஜ்ஜைக்காக*
*விடாமல் விடாமல் முயற்சிக்க*
*வழியும் குருதி*
*வாயுள்.*

*எதிரே நம் கோபத்தைக் காண்பிக்க ஆட்கள் இல்லாத போது நம் மீதே கோபத்தைச் செலுத்திக் கொண்டு வருந்துவது பல நேரங்களில் நடப்பது தானே? அதனை எலும்புக்குள் இருக்கும் மஜ்ஜைக்காக வாயினை காயப்படுத்துவதைக் கூட பொருட்படுத்தாமல் சுவைக்கும் நிலையை உவமை ஆக்கியுள்ளது அருமை. ஊன் உணவை உண்போருக்குத் தெரியும் சதையை விட எலும்பு மஜ்ஜையைத் தான் விரும்பி உண்போம். அதில் பல ஆண்டுக்கால மனித வரலாறும் உள்ளது. வேட்டையாடும் சமூகமாக வாழ்ந்தபோது மற்ற விலங்குங்கள் வேட்டையாடி உண்டு மிச்சம் வைத்த கறியை உண்ணக் கூடிய வாய்ப்புத் தானே நமக்கு இருந்தது. அப்போது நமக்கு அந்தப் பசியில் கிடைத்தது எலும்பும் அதில் ஒட்டியிருந்த மஜ்ஜையும் தான். அந்த மரபின் நினைவுகள் தான் இப்போது நம் உணவுப் பழக்கத்திலும் தொடர்கின்றது.*

*நெகிழி முத்தங்கள்*

*இந்த நாளும்*
*சுவடின்றிக் கடந்து*
*போகுமா*

*கடற்கரை மணல்*

*பதிவுருக்களைக் கடல்*
*அலைகள்*
*தானழிக்கும்*

*அவள் வரைந்த*
*கோலத்தின் புள்ளிகளை அவளே*
*அழிக்கிறாள்*



*இவனது கால அட்டவணை*
*அவளது கையில்*

*தட்டுத் தடுமாறி விழுந்த*
*நண்பகலை*
*தலையாட்ட வைக்கிறாள்*

*நாளை தான் சந்திப்பு*
*என்றாள் போலும்*

*தலையாட்டி பொம்மை*
*தலை சுற்றி*
*தஞ்சை நெடுங்களத்தில்*

*காற்றைச் சூடாக்குகிறது முன்பகல் வெயில்*

*இந்த மென்காற்றில்*

*பறக்கின்றன நெகிழி*

*முத்தங்கள்.*

*காதலனின் தவிப்பை, காதலியைச் சுற்றியே சுழலும் அவன் உலகத்தை மிகச் சிறப்பாகப் படம் பிடித்துக் காட்டுகிறது.*

*ஒளி தேடும் தாவரம்*

*அழைக்குமிடத்தில்*
*நீயுமில்லை*

*அழைக்க வேண்டிய*

*நிலையிலில்லை*

*அழைக்க வேண்டும்*
*என்று நினைத்துக்*
*கொள்கிறோம்*

*காலம்*
*இடைவெளியாகவும்*
*ஏமாற்றம் அடைந்த*
*இருள் வெளியாகவும்*
*இருக்கலாம்*

*ஒளி தேடும்*
*தாவரம்*
*ஒவ்வொருவருக்குள்ளும்*



*காதலர்கள் இடையில் இடைவெளி வரும்போது ஏற்படும் தவிப்பை அழகாக பதிவு செய்திருக்கும் கவிதை. தாவரம் என்றாலே ஒளியைத் தேடினால் தானே உயிர் வாழ்ந்திட இயலும்? அது போல காதலன் காதலிக்கும் காதலி காதலனுக்கும் ஒளி தேடும் தாவரங்கள். ஒருவரின் இருப்பு மற்றொருவரின் வாழ்தலுக்கு அவசியம் என எண்ணத் தோன்றுகிறது.*

*ஏகாந்தத்தில் பதிவுகள்*

*காலம் விரைகிறது*
*காலம் தேய்கிறது*
*காலம் கரைகிறது*

*காலத்தின் கல்வெட்டாய்*
*நம் அகத்தின் உரையாடல்*
*நிலைக்கிறது*

*அளவு பெரிதன்று*
*கால மாத்திரை கணக்கீடு*
*ஒலிக்குறிப்பு*
*மௌன விசும்பல்*
*எல்லாமே எல்லையற்ற*
*வெளியில்*
*ஏகாந்தத்தின் பதிவுகள்.*

காலம் ஓடிக் கொண்டே இருக்கும். ஆனால் காதலில் உள்ளோர்க்கு சின்ன ஒலிக் குறிப்புகளும் மௌனங்களும் கூட இரகசியம் கூறிச் செல்லும். அங்கே காலம் நீண்டிருப்பதோ குறைந்திருப்பதோ இரு மனங்களைத் தீண்டுவதில்லை. அய்ன்ஸ்டீனின் "Theory of relativity" ஐ இங்கே பொறுத்திப் பார்க்கலாம்.

*அவரவர் மனச்சித்திரம்*

*நாட்களைப் பிரித்து*
*நாழிகைகளாய்*




*நிமிடங்கள் உடைத்து*
*வினாடிகளாய்ப்*
*புரள்கிறேன்*

*சுடுமணலில் புரண்டெழும் புரவி*
*ஒன்று கண்ணெதிரே*
*கூழையாற்று வெளியில்*

*அழைப்பதும்*
*அழையாமலிருப்பதும்*
*அழையா விருந்தாளியாக*
*ஊடறுப்பதும்*

*நாட்களைப் பிரித்து*
*நாழிகைகளாய்*

*அவரவர்*
*மனச் சித்திரம்.*

*காலத்தின் குகையில்*
*செதுக்கல்கள்*

*புலம்பல்கள்*
*தவிப்பின் தள்ளாட்டம்*

*மடலேறுதல் இல்லை*

*கிறுக்கல்கள் தானே*
*இக்கால*
*ஒருதலையின்*
*நீள் கவிதை.*

*மீண்டும் சங்க இலக்கியப் பயன்பாடு மடல் ஏறுதலைப் பற்றிக் கூறும் கவிதை. தலைவி தன் காதலை ஏற்க மறுத்தால் பனை ஓலையால் குதிரைச் செய்து மடலேறி தலைவியை அடைந்தே தீருவேன் என்பதை விளக்கும் பாடல்களைச் சங்க இலக்கியத்தில் நாம் படித்திருக்கலாம். ஆனால் இன்றைய ஒருதலைக் காதலுக்கு மடலேறுதல் முடியாது கிறுக்கல்கள், அதாவது கவிதைகள் என்று கூட புரிந்து கொள்ளலாம். அது தானே இயலும் என்கிறது கவிதை.*

*அவரவர் ஏக்கங்களோடு..*

*அழைத்தாய்*
*உன் இடம் தேடி வந்தேன்*

*அழைத்தேன்*
*என் அழைப்பை*
*நீ ஏற்கவில்லை*

*வழமையான வருத்தமும் ஆற்றாமையும்*
*என்னை நகர்த்த*
*வீடு திரும்பிய நேரத்தில்*
*உனக்கான உரையாடலை*
*நிரப்பிக் கொண்டே வந்தேன்*

*எனக்கான சமாதானத்தை நீ*
*நிரப்பவில்லையெனினும்*
*நான் கடந்த தொலைவு*
*காட்டாற்று வெள்ளம்*
*காட்டுத்தீயின் வேகம்*

*அடியே*
*நாளை ஆடிப்பெருக்கு*

*நானும் வருகிறேன்*

*காவிரித் தீரத்துக்கு*

*நீயும் மாநகர்க்*
*குழாய்த் தண்ணீர் எடுத்துக்கொள்*

*அச்சுவெல்லம் பச்சரிசி*
*தேங்காய்த் துண்டுகள்*
*கலந்து*
*பால்யத்தை மீட்டுவோம்*
*அவரவர் ஏக்கங்களோடு.*

*ஆடிப்பெருக்கு என்பது இன்று வெறும் ஏக்கங்களாக மட்டுமே உள்ளது, நம் காதலும் அதுபோலத்தான் என்பதைக் காவிரியோடு கோடிட்டுக் காட்டும் கவிதை. இந்தக் கவிதை காவிரி ஆற்றில் அடித்துக் கொண்டுச் சென்ற ஆட்டனத்தியை ஆதிமந்தி தேடிச் செல்லும் சங்கப் பாடல்களையும் நினைவில் நிறுத்துகிறது.*

*எப்படி ஏற்பீர் ஐயன்மீர்?*



*மனசின் அடியாழம்*
*தொட்டு*
*உரையாடுபவன்*

*எதையும்*
*தீவிரமாய் அணுகி*
*உள்ளும் புறமும்*
*மூழ்கி*
*விடை காண*
*வேட்கை மிகுதியால்*
*இறந்து இறந்து*
*பிறப்பவனை*
*நீங்கள்*
*எப்படி ஏற்பீர்*
*ஐயன்மீர்!*

*கேள்வி கேட்கும் எவரையும் முதலில் இந்தச் சமூகம் ஏற்க மறுக்கின்றது. சாக்ரடீஸ் தொடங்கி தந்தை பெரியார் வரை இது தொடர்கதை. ஆனால் அந்தக்*

*கேள்விகள் தான் இந்தச் சமூகத்தைச் செம்மையுறச் செய்திருக்கின்றது என்பதைக் கூறும் இயல்பான கவிதை.*



*ஒரு வானவில்*

*வாழ்க்கை ஒரு*
*வானவில்.*

*ஆனால்*
*உடன் பயணிப்பவர்*
*பல வேளைகளில்*
*சில நிறங்களை*
*அழிக்கின்றனர்.*

*என்ன செய்ய!*

*இருப்பினும்*
*வாழ்க்கை ஒரு வானவில்*

*வாழ்க்கையில் என்ன பிரச்சனைகளைச் சந்தித்தாலும் நம்முடன் இருப்பவர்களே நமக்கு இடர்களை தந்தாலும் வாழ்க்கையை நேர்மறையாகப் பார்க்கும் எண்ணத்தை விதைக்கிறது இந்தக் கவிதை.*

*வானெங்கும் வாசம் வீச*

*மலர்ந்த சொற்களை*
*மடித்தெடுத்து*
*மொட்டாக்கி*
*வைத்து விடுகிறான்*
*பயணப் பெட்டியில்*

*ஒருநாள் விரியும்*
*வானவில் கூட*
*வானெங்கும் வாசம் வீச*
*சொற்களின் வண்ணங்கள் மலராகும்*
*பருவ மழை விந்தை.*

விடலைப் பருவத்துக் காதலை மென்மையாகக் கூறும் கவிதையாக இந்தக் கவிதை உள்ளது.

ஊடலென்பது .

தகவல் தொடர்பைத்
துண்டித்து விட்டு
மகிழ்ந்திருப்பாயோ

ஊடலென்பது
சிறு பிணக்குதான்
நீட்டித்து விடாதே

உங்கள் ஊரில்தான்
இருக்கிறேன்

அழைத்தால்
நிராகரித்து
அவமானப்படுத்துவாய் என்ற
அச்சத்தோடு.

ஊடல் காமத்துக்கு இன்பம் என்றக் குறளை படித்திருப்போம். இந்தக் கவிதை ஊடலை வேறு ஒரு கோணத்தில் காட்டுகிறது. ஊடலைத் தொடரவிட்டால் அங்கே காதல் கானல் நீராகிவிடும் என்பதை உணர்த்தும் கவிதை.

திரும்பி விட்டேன்

திட்டமிட்டபடி
பயணம் கிளம்பி

திரும்பவும்
திரும்பி விட்டேன்
புறப்பட்ட இடத்திற்கே

உன் நிலத்தில்
நீங்கிப் பறக்கும்
ஒரு பறவை

வெறுமை சூழ்
என் வானம்
பறவையின் பறத்தலையும் புறக்கணிக்கப்பட்ட காதலையும் உணர்த்துவதாக அமைந்த கவிதை.

பதில்

பதில்
சுமக்கவேண்டிய
புறாவின் கால்
வளர்ந்தோங்கிய
புல்வெளியின்
சிடுக்குகளில்.

பல நேரங்களில் நம் மனம் தேடும் பதில்கள் புறாவின் கால் சிடுக்குகளில் சிக்கியதைப் போலத்தான் சிக்கிக் கொள்கின்றன. கேள்விகள் மட்டும் காத்துக் கிடக்கின்றன என்ற உண்மையை உணர்த்தும் சிறப்பான கவிதை.

தெரிந்தே ஏமாந்தேன்

முதலில் இருந்தே
இந்த
ஆடுகளத்தில்
நீ சரியாக
விளையாடினாய்

நான்தான்
தெரிந்தே ஏமாந்தேன்

உன் திட்டப்படியே
ஆடுகளம்
அமைந்தது உன்
குற்றமன்று

நாம் இணைந்து
விளையாடுவதாய்
நினைத்தது
நீயல்ல

ஒருதலைக் காதலின் தவிப்பையும் ஏமாற்றத்தையும் வெளிப்படுத்தும் கவிதை.

கை நழுவிப் போகிறது . ..

உரையாடலை
நீ
மௌனத்தின் அருகில்
நின்று
கேள்விகளாக்கி
விடுகிறாய்



கேள்விகளின்
மத்தியில் நின்று
உம் மென்று
சொல்லுதல்
முடுக்கமா
காயமா
நிழலா

ரசவாதியாய்
களத்தில் இறங்கி விட

பார்வையாளன்
ரத்தம் கக்கிச்
சாவது போல
பயங்காட்ட
காலவெளி
கண்ணெதிரே காணாமல்

கை நழுவிப் போகிறது
இலைத் தண்ணீர்.

இலைத் தண்ணீரை ஏந்திக் கொண்டு நடப்பது இயலாத காரியம். அதைப் போலத் தான் காதலர்களிடையில் சில தருணங்கள். காதலை இலைத் தண்ணீர் போல நழுவ விடாமல் பிடித்துக் கொள்வதில் உள்ளது இருவரின் வெற்றி என்பதை உணர்த்தும் கவிதை.

சிறப்பான கவிதைகளைக் கொண்டுள்ள உன்னோடு உரையாடுதல் என்றக் கவிதைத் தொகுப்பு அனைவரும் படிக்க வேண்டிய தொகுப்பு.

# "அறம்செய் அருகன்?"



**முனைவர் சிவ. இளங்கோ,**

*6, கவிஞர் புதுவைச் சிவம் வீதி,*
*வெங்கட்ட நகர், புதுச்சேரி – 605 011.*
*பேசி: 99940 78907.*
*Mail ID: ilangosiva57@gmail.com*

*அறம்செய் அருகன் என்றது மகாவீரரைத்தான். சமண (சைன) சமயத்தின் 24 ஆவது தீர்த்தங்கரராகப் போற்றி வணங்கப்படும் மகாவீரரின் இயற்பெயர் வர்த்தமானர். விதேக நாட்டின் வைசாலி நகரில் குண்டலபுரம் என்னும் ஊரில் கி.மு.599 ஆம் ஆண்டில் வர்த்தமானர் பிறந்தார். விதேக நாட்டின் அரசப் பரம்பரையினரான சித்தார்த்தனுக்கும், இராணி திரிசீலை பிரியகாரணிக்கும் மூன்றாவது குழந்தையாகப் பிறந்த வர்த்தமானர், இளமை முதற்கொண்டே ஒரு ஞானக் குழந்தையாக அறியப்படுகிறார். இவரது பிறப்பின்போது இவரது தாய் பதினாறு மங்கலக் காட்சிகளைக் கனவில் கண்டார் என்றும், பிறப்பின்போது அந்நாடு வளம் கொழித்தது என்றும், குழந்தை பிறந்தபின் அதைத் தரிசிக்கப் பல முனிவர்கள் வந்தனர் என்றும் வழக்கமான தெய்வக் குழந்தைகள் கதைகள் வர்த்தமானருக்கும் சொல்லப்பட்டாலும், அவரது தந்தையால், பிற அரச குமாரர்களைப் போலவே கல்வி, கேள்வி, வீர விளையாட்டுகளில் ஈடுபடுத்தி வளர்க்கப்பட்டார்.*

*வளரும் பருவத்தில் எதற்கும் அஞ்சாதவராகத் தன்னை வெளிப் படுத்திக்கொண்ட வர்த்தமானர், பாம்பு போன்ற நச்சு விலங்குகளுக்கு அஞ்சாமல், மதம்பிடித்த யானையையும் துணிந்து எதிர்க்கும் வீரராகத் திகழ்ந்ததால் மகாவீரர் என்று அழைக்கப்பட்டார். ஆனால் தனக்குள்ளே இருக்கும் ஏழு யானைகளை அடக்கினால்தான் தன்னை உண்மையான வீரனாகக் கருத முடியும் என்றே மகாவீரர் கருதினார். காமம், வெகுளி, அவா, அச்சம், மாயை, மயக்கம், போட்டி என்பவையே அந்த ஏழு யானைகள். மேலும், பற்றும், பற்றறுத்தலும் வினைப்பயனால் ஏற்படும் விளைவுகளே என்னும் மகாவீரரின் தத்துவ விவாதங்களும், அரச குமாரனாக இருந்தும் அவரது எளிமையான தன்மையும், உட்கொண்ட எளிமையான உணவுகளும் அவரைத் துறவை நோக்கி அழைத்துச் செல்வதாக ஆகிவிடும் என்றஞ்சிப் பெற்றோர் அவருக்கு யசோதை என்னும் அண்டை நாட்டு ராஜகுமாரியை மணம் செய்வித்தனர். அவர்களுக்குப் பிரியதர்ஷினி என்றொரு மகளும் பிறந்தாள் (சமண சமயத்தின் திகம்பரப்*

*பிரிவினர் மகாவீரருக்குத் திருமணமாகவில்லை என்று மறுக்கின்றனர். சுவேதாம்பரப் பிரிவினர் திருமணம் ஆனதை உறுதிப்படுத்து கின்றனர்).*



*இல்லறத்தில் ஈடுபட்டபோதும் துறவறத்துக்குத் தாயகமாகத்தான் இல்லறத்தை எண்ணினார் மகாவீரர். எனவே இல்லறம் எனும் இரும்புச் சுரங்கம் வழியாகத் துறவறம் எனும் தங்கச் சுரங்கத்தில் நுழைய முற்பட்டார். அவருடைய பெற்றோர் சல்லேகனம் என்னும் சமண நெறியின்படி வடக்கிருந்து உயிர் துறந்த பின்னர், தன்னுடைய 28 ஆவது வயதில் உள்ளூரில் இருந்த பார்சுவநாதர் வம்சத் துறவி ஒருவரிடம் தீட்சை பெற்றுத் துறவியானார் மகாவீரர். பின்னர் வனகண்டம் தொடங்கிக் கூலக் கிராமம், குமாரகாவோம், நாலந்தா அருகில் கொல்லேகம், மோராக், அஸ்திகம், சிராவஸ்தி, வத்ச நாட்டுத் தலைநகர் கௌசாம்பி என்று நடந்து திரிந்து சிரிம்பிக கிராமத்தின் ரிசிவலுகா ஆற்றங்கரை வந்தடைந்தார். ஆற்றங்கரையும், பசுமை மரங்கள் அடர்ந்த சூழ்நிலையும் அவருடைய ஞானப் பொறியைத் தூண்டிவிட, அங்கிருந்த ஒரு பெரிய பிண்டி மரத்தடியில் (ஆல மரம்) அமர்ந்து கடுமையான தியானத்தில் ஈடுபட்டார். இளமையிலேயே மதிஞானம், சுருத ஞானம், அவதிக ஞானம், மனப்பரியை ஞானம் ஆகிய நான்கு ஞானங்கள் கைவரப் பெற்றிருந்த மகாவீரருக்கு ஆற்றங்கரை ஆலமரத்தடியில் மேற்கொண்ட தவம், ஐந்தாவது ஞானமாகிய கேவல ஞானம் என்னும் முழுதுணர் ஞானத்தை*

*அளித்தது. இவ்வைந்து ஞானங்களைப் பெற்றதனால் ஜீவன் முக்தர், சர்வக்ஞர், அரகத் பரமேட்டி என்றும் மகாவீரர் அழைக்கப் பட்டார்.*

*இதன் பிறகு மக்களைக் கடைத்தேற்றும் மார்க்கத்தில் மேலும் பல ஊர்களுக்குச் சென்று அறிவுரைகள் (உபதேசம்) வழங்கலானார். மத்தியம அபாபா, ராஜகிருக நகர், விதேக நாடு, வத்ச நாடு, கோசல நாடு, வஞ்சியம், அவக்தம், மகதம், மெரிதியம் என்று பல நாடு, நகரங்களில் உபதேசங்கள் நிகழ்த்தினார். சென்ற இடங்களிலெல்லாம் மகாவீரர் சிறப்பாக வரவேற்கப்பட்டார். இவருடைய உறவுகள் எல்லாமே அரச குடும்பத்தினராகவும், இவர் சென்ற நாடுகளை ஆண்டு வருபவர்களாகவும் இருந்ததால், தங்கள் அரசப் பரம்பரையில் பிறந்த ஒருவர் துறவியாகி அனைவரும் வணங்கும் சர்வக்ஞராக இருப்பதைக் கண்டு, பூரித்து, அவரை வரவேற்று, வணங்கி அவரது போதனைகளையும், சமயத்தையும் அந்நாட்டு அரசர்கள் ஏற்றனர். சமணம் செழித்திருந்த காலத்திலேயே ஆசீவகம், பௌத்தம், சைவம் ஆகிய சமயங்களும் அரச ஆதரவோடு மக்கள் செல்வாக்குப் பெற்றிருந்தன. வெளியிலிருந்து வந்த சமயமாகக் கருதப்பட்ட வைதீகமும் பரவிச் சமயங்களுக்குள் போட்டியும் நிலவிவந்தது.*



*ஞானம் தேடி அலைந்த காலங்களில் மகாவீரர் அனுபவித்த துன்பங்களும் அதிகம். அவர் தலையிட்டுத் தீர்த்துவைத்த சமரசங்களும் அதிகம். அவர் திகம்பரராகத் (ஆடையின்றி) திரிந்ததால் ஊருக்கு வெளிப்புற மடங்களிலோ, மரத்தடிகளிலோதான் தங்கினார். இதனால் பல விலங்குகளின் தொல்லைக்கு அவர் ஆளானதுண்டு. பாம்புக் கடிகளும் பட்டதுண்டு. ஆனாலும் சிறு பூச்சிகள், வண்டுகளைக் கூட அவர் துன்புறுத்தியதில்லை. ஒரு முறை சில*

வழிப்போக்கர்கள் உணவு சமைக்கப் பற்றவைத்த தீயில் அவரது பாதம் கருகியபோது கூட, தீவிர தியானத்தில் இருந்த மகாவீரர் அதை உணரவில்லை. வழிப்போக்கர்களே தீயை அணைத்து அவரது பாதத்தில் வீழ்ந்தனர். தியானங்களின்போது மனித சஞ்சாரம் அவருக்குச் சங்கட மேற்படுத்தியது. இதனாலேயே அவரை வரவேற்று உபசரித்த ஆசிரமங்களிலிருந்து அவர் வெளியேறினார். அஸ்தீகக் கிராமத்திற்கு அவர் சென்றபோது அந்தக் கிராமமே பயந்து நடுங்கிக் கொண்டிருந்த, அரக்கனாகப் பார்க்கப்பட்ட இயக்கன் என்பவன் பணிவுடன் வந்து மகாவீரரை வணங்கி நின்றான். இப்படிப் பல தொன்மக் கதைகள் மகாவீரர் வாழ்க்கையோடு சேர்த்துச் சொல்லப்பட்டாலும், மகாவீரரின் பண்புக் கேற்புடையதான சில நிகழ்வுகளும் உண்டு.



ஒருமுறை கௌசாம்பி நகருக்கு மகாவீரர் சென்றபோது அங்கு அடிமை வியாபாரம் தலைவிரித்தாடுவதைக் கண்டு, அந்தத் தீமையை சமூக அமைப்பிலிருந்து விலக்க முடிவெடுத்தார். சந்தனா என்ற அடிமைப் பெண்ணிடம் அவர் பிச்சை பெற்று உணவுண்டதால் அவ்வூர் அரசன் சந்தனாவை அடிமைத் தளையிலிருந்து விடுவித்தான். அந்நகரில் இருந்த அனைவரும் தங்கள் தங்கள் அடிமைகளை விடுதலை செய்தனர். வத்ச நாட்டை ஆண்டுவந்தவளும், கணவனை இழந்தவளுமான மிருகாவதி என்னும் மங்கையையும் அவளது நாட்டையும் கைப்பற்ற அவந்தி நாட்டு மன்னன் முனைந்து போர் தொடுத்த போது, மகாவீரரின் அறிவுரையைக் கேட்டு அப்போர் விலக்கிக் கொள்ளப்பட்டது. வஞ்சியக் கிராமத்துப் பெரும் வணிகனும், இல்லறத்தானுமாகிய ஆனந்தன் என்பவன் மகாவீரரின் அறிவுரையைக் கேட்டு ஒழுகியதால் அவதிக ஞானம் பெற்று நற்கதி யடைந்தான். மகாவீரர் தீர்த்தங்கரராகி மீண்டும் சிராவஸ்தி நகருக்கு வந்தபோது ஆசீவகம் என்னும் சமயத்தைத் தோற்றுவித்த மற்கலி கோசாலரைச் சந்தித்தார். கோசாலர்,

*மகாவீரரின் பழைய சீடராக இருந்து சில கருத்து வேற்றுமையால் பிரிந்து ஆசீவகம் என்னும் தனிச் சமயம் கண்டு அச்சமயத்தின் தீர்த்தங்கரராகப் போற்றப்பட்டவர். பிரிந்து போனவர்களின் சந்திப்பு இனிமையாகக் கழியாத காரணத்தால் விரைவிலேயே கோசாலர் உயிர் துறக்கும் அவலம் ஏற்பட்டது. அந்நிலையிலும் தீர்த்தங்கரர்களுக்குரிய பொறுமை காத்துத் தான் கூறிய போதனைகளுக்குத் தகுந்தவராகத் தன்னை நிரூபித்துக் கொண்டார் மகாவீரர்.*

*மகத நாட்டைச் சேர்ந்த இந்திரபூதி கௌதமர் என்னும் பிராமணர், கோமிலன் என்னும் பெருஞ் செல்வந்தன் ஏற்பாடு செய்த யாகத்தை நடத்துவதற்கு மத்தியம அபாபா எனும் நகருக்கு வந்தார். அங்கு வந்திருந்த தீர்த்தங்கரரான மகாவீரர் பற்றிச் செய்தியறிந்து அவருடன் வாதம் புரிய வந்து, கர்மாவைப் பற்றி வாதித்து, அவரிடம் தோற்று மகாவீரருக்குச் சீடரானார் இந்திரபூதி. அவரது சகோதரர்களும் அவர்களிட மிருந்த ஆயிரக்கணக்கான சீடர்களும் மகாவீரரிடம் சரணடைந்தனர். இவர்களைக் கொண்டு நான்கு சங்கங்களை மகாவீரர் அமைத்தார். இல்லறத்தார்க்கு (ஆண், பெண் என்ற) இரு சங்கங்களும், துறவறத்தார்க்கு (ஆண், பெண் என்ற) இரு சங்கங்களும் அமைத்து அவற்றிற்குப் பதினோரு சீடர்களைப் (கணதரர்) பொறுப்பில் வைத்துத் தலைமைச் சீடராக இந்திரபூதியை நியமித்தார். சங்கங்களை அமைப்பதிலும், சமண சமயக் கொள்கைகளைத் தொகுப்பதிலும் தனக்கு முன்னோடியான 23 ஆவது தீர்த்தங்கரரான பார்சுவநாதரின் அடியொற்றிப் பின்பற்றினார் மகாவீரர். மகாவீரரின் சமகாலத்தவரான கௌதம புத்தரும் பார்சுவநாதரின் கருத்துக்களால் கவரப்பட்டுப் பின் அதிலிருந்து கிளைத்த புதிய கோட்பாடுகளின் அடிப்படையில் பௌத்த சங்கங்களை நிறுவினார். மகாவீரரும், கௌதம புத்தரும் நேரில் சந்தித்த நிகழ்வினை ஆன்மிகத்தில் பொருந்தாத துறவியான ஓஷோ குறிப்பிடுகிறார்.*

*பரிநிர்வாணம் என்னும் பிறவா நிலையை எல்லோரும் அடைவதில் உள்ள சிக்கலை உணர்ந்த மகாவீரர் இல்லறத்தார்க்கும் (சிராவகர்), துறவறம் மேற்கொள்வோர்க்கும் (ச்ரமணர்) உரிய கடமைகளைப் போதித்தார். இல்லறத்தார் ஒழுகவேண்டிய கடமைகளாக மகாவீரர் போதித்த அகிம்சை, வாய்மை, கள்ளாமை, பிரமசாரியம், பொருள் வரையறை ஆகிய ஐந்து கடமைகள் அனுவிரதம் எனப்பட்டன. இவற்றோடு ஐம்புலன் அடக்கம் முதலிய மேலும் 23 கடமைகளைச் சேர்த்து துறவறத்தார் ஒழுக வேண்டிய 28 கடமைகளையும் மகாவீரர் போதித்தார். அவை மகாவிரதம் எனப்பட்டன. இரு திறத்தாரும் (இல்லறம், துறவறம்) மேற்கொள்ளும் மேற்கூறிய அறங்களும், ஒழுகலாறுகளும் மகாவீரர் காலத்திலேயே தொகுக்கப்பட்டன. இவை பன்னிரண்டு ஆகம அங்கங்களாகத் தொகுக்கப்பட்டு இவையே மறைநூல் எனப்பட்டன.*

இதனாலேயே மகாவீரரை ‘அங்கம் பயந்தோன்’ என்று சிலப்பதிகாரத்தில் குறிப்பிடுகிறார் இளங்கோவடிகள்.



மகாவீரருக்கு 72 வயதானபோது ராஜக்கிருக நகருக்கு வந்து சமவ சரணம் எனப்படும் மண்டபத்தில் தங்கி உபதேசங்கள் நிகழ்த்திக் கொண்டிருந்தார். ஒரு நாள் அமாவாசையன்று பாவாபுரி என்னும் ஊரில், அரசர், செல்வந்தர், பொதுமக்கள் என எல்லோரும் கூடியிருந்த மண்டபத்தில் உரை நிகழ்த்தினார் மகாவீரர். “நோய், சாவு, துன்பம் இந்த மூன்றையும் எந்த உயிரும் விரும்புவதில்லை. எனவே தன்னை நேசிப்பதைப் போலவே பிற உயிர்களையும் நேசிக்க வேண்டும். அன்பும், உதவியும் கொண்டு பகைமையைத் தள்ளவேண்டும்” என்று அறிவுறுத்தினார். இந்த உரையே அவரது இறுதி உரையாக அமைந்து போனது. கி.மு.527 ஆம் ஆண்டு கார்த்திகை மாதம் பதினான்காம் நாள் அதிகாலையில் அவர் பரிநிர்வாணம் (பிறவாநிலை) அடைந்தார். மகாவீரர் பரிநிர்வாணத்தின்போது இந்திரபூதி, சுதர்மர் ஆகிய இரு சீடர்களும் உடனிருந்தனர். அண்டை நாட்டு அரசர்களும், செல்வந்தர் களும், பொது மக்களும் செய்தி கேட்டுப் பாவாபுரியில் வந்து குழுமினார்கள். “உலகின்

*ஒளி போய்விட்டது, ஆகவே விளக்குகளை வரிசையாக ஏற்றிவைத்து ஒளி உண்டாக்குவோம்'' என்று கூறி எங்கும் ஒளிதீபங்களை ஏற்றிவைத்தார்கள். அந்நாளையே தீபஒளித் திருநாளாக இன்று வரையும் கொண்டாடி வருகிறார்கள்.*

*கொல்லாமையையும் (அகிம்சை), வாய்மையையும் (சத்தியம்) முதலிரண்டு இடத்தில் வைத்துப் போற்றியவர் மகாவீரர். இவை மனித குலம் முழுமைக்கும் பொருந்துபவையாக உள்ளன. தன்னுடைய சமயம் சார்ந்தவர்களுக்கு மட்டுமல்லாது உலக மக்கள் அனைவரும் பின்பற்றும் அறிவுரைகளைக் கூறி உலகம் முழுவதும் ஒரே சமயமாக, ஒரே குடைக்கீழ் நின்று உயர்பேறு அடைவதாக இருக்க வேண்டும் என்ற பெருநோக்குப் பார்வையில் அவரது போதனைகள் அமைந்திருந்தன. அறம் என்னும் உயர் சிந்தனையை உலகிற்கு முதலில் வழங்கியது சமணமே. உலகை உய்விக்கும் வழி அறமே என்று கூறி, அதனைக் கடைப்பிடிக்கும் இருவழிகளை இல்லறம் என்றும் துறவறம் என்றும் வகுத்து, அதற்கான ஒழுகலாறுகளையும் வகுத்து இன்று வரை அறத்தை வலியுறுத்திக் கடைப்பிடித்து வரும் சமயமாகவும் சமணம் உள்ளது. 'அறத்தான் வருவதே இன்பம்' என்றுரைத்து அறன் வலியுறுத்தல் என்றோர் அதிகாரமே அளித்துள்ளார் திருவள்ளுவர்.*

*நற்காரியங்கள் செய்து இறையருள் பெற்று விண்ணுலகப் பேறு அடைவதே மானுடர் லட்சியமாக இருந்தபோது, யாருடைய அருளாலும் வீடுபேறு அடைய முடியாதென்றும், நிலையற்ற இவ்வுலகில் நற்காட்சி, நல்ஞானம், நல்லொழுக்கம் ஆகிய மும்மணிகளே மனிதர்களின் வினையறுத்து வீடுபேறடையச் செய்யுமென்றும் மகாவீரர் போதித்தார். மகாவீரரின் நிலையாமைக் கொள்கையை இந்தியத் தத்துவங்கள் பலவும் ஏற்றுக்கொண்டன. அவர் கூறிய அனு விரதக் (சிராவகர் கடைப்பிடிக்க வேண்டிய) கொள்கைகள் ஐந்தும் கௌதம புத்தரின் பஞ்சசீலக் கொள்கையோடு ஒத்தவை. புத்தர் அதை தம்மமாகக் கொண்டார். மகாவீரர் போதித்த அகிம்சையே இந்திய விடுதலைப் போராட்டத்தின் பின்புலமாக அமைந்தது. சமண மரபினில் வந்த மகாத்மா காந்தியின் மனதை ஆட்கொண்ட அகிம்சைத் தத்துவம் பிரிட்டிஷ்காரர்களை அசைத்துப் பார்த்தது என்றால் அதற்குச் சமண மரபில் போதிக்கப்பட்ட அகிம்சையை முதல் கடமையாக மகாவீரர் போதித்ததே காரணம். உயிர்க் கொலையையும், வேள்விகளையும் வலியுறுத்திய சமயங்கள் கூட, பின்னாட்களில் அகிம்சையைத் தங்களின் தர்மமாக ஏற்றுக் கடைப்பிடித்து வருகின்றன. எல்லா உயிரையும் சமமாகப் பார்க்கும் பார்வை சமணத்தில் கிளைத்து, ஓரறிவு முதல் ஆறறிவு உயிர் வரை வரையறுத்து, எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகக் கூடிய ''பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்'' என்னும் உயர்நெறியை அறமாகப் போதித்தவர் மகாவீரர். அவர்தான் அறம் செய் அருகர்.*

# அண்ணல் அம்பேத்கர் எழுத்தும் பேச்சும்

**முனைவர் தேமொழி**
*சான் ஃபிரான்சிஸ்கோ, அமெரிக்கா*



*இந்திய அரசியலமைப்பின் சிற்பி டாக்டர். பி.ஆர். அம்பேத்கர் (ஏப்ரல் 14, 1891 - டிசம்பர் 6, 1956) அவர்களை இந்தியாவின் சமூகச் சீர்திருத்தவாதி, இந்திய சுதந்திர இயக்கத்தின் முன்னணிப் போராளிகளில் ஒருவர், முற்போக்குச் சிந்தனை கொண்டவர், தொலைநோக்கு கொண்ட ஒரு அரசியல்வாதி, வழக்கறிஞர் மற்றும் சட்ட அமைச்சர், இந்தியப் பொருளாதார கட்டமைப்பை உருவாக்கிய நிபுணர், தொழிலாளர் உரிமைகளுக்குச் சட்டங்கள் மூலம் பாதுகாப்பு கொடுத்தவர், பெண்கள் உட்பட ஒடுக்கப்பட்ட சமூக மக்களின் உரிமைகளுக்காகப் போராடுவதற்காகத் தன் வாழ்நாளை அர்ப்பணித்தவர் என்று அவரது பற்பல செயற்பாடுகளின் அடிப்படையில், பல கோணங்களில் அவரை நினைவு கூர்கிறோம். தாழ்த்தப்பட்ட ஒரு குடும்பத்தில் பிறந்து அதனால் அவரது வாழ்நாள் முழுவதும் பாகுபாடுகளை எதிர்கொண்ட அம்பேத்கர், பாலின வேறுபாடின்றி அனைத்து குடிமக்களுக்கும் சமத்துவத்தை உறுதி செய்யும் இந்திய அரசியலமைப்பை உருவாக்குவதில் முக்கிய பங்கு வகித்தார்.*

*அம்பேத்கரின் எழுத்துகள் இந்தியாவின் சமூக முன்னேற்றத்திற்கான விடியலைத் தோற்றுவித்தன. அம்பேத்கர் எழுத்துகளின் தொகுப்பு முதன் முதலில் பகவான்தாஸ் அவர்களால் தொகுக்கப்பட்டது. மகாராஷ்டிரா அரசு அம்பேத்கர் எழுத்துக்களை 2 தொகுதிகளாக வெளியிட்டது. அம்பேத்கரின் எழுத்துகளைத் தொகுத்த வசந்த் மூன் அவற்றை 21 நூல்களாக வெளியிட்டார். இடையில் நீதிமன்றத்தில் தொடுக்கப்பட்ட வழக்கால் இடையூறுகள் எதிர்கொள்ளப்பட்டன. வழக்கு முடிந்த பிறகு அம்பேத்கர் எழுதியவை, அவரது எழுத்துகள் கிடைக்கக் கிடைக்க அவை தொகுதிகளாகத் தொகுக்கப்பட்டு வந்தன. இந்த தொகுதிகளில் அம்பேத்கர் எழுதியவை பொருண்மை அடிப்படையிலோ, அவருடைய சிந்தனை அடிப்படையிலோ, ஆண்டுவாரியாகவோ தொகுக்கப்படவில்லை என்பது ஒரு குறை. அதனால் அம்பேத்கர் ஒரு பொருண்மையில் சொல்லிய கருத்துகள் பல தொகுதிகளில் இடம் பெறுவதால் ஒருங்கிணைத்துப் புரிந்து கொள்வது சற்றுக் கடினமான செயலாக இருக்கிறது.*

இக் குறையைக் களையும் பொருட்டு அம்பேத்கர் எழுத்துகளில் ஒரு குறிப்பிட்ட பொருண்மையில் உள்ளவற்றை, அதாவது ... சாதி-சாதிய ஒடுக்குமுறை, இந்தியப் பொருளாதாரம், பெண்விடுதலை, இந்தியச் சுதந்திரம், காங்கிரஸ் நடவடிக்கைகள் என்பது போன்ற ஒவ்வொரு பொருண்மையின் கீழும் பொருத்தமான அம்பேத்கரின் எழுத்துகள் தொகுக்கப்பட்டு, அத்துடன் அவை கால வரிசையாகவும் ஒவ்வொரு தொகுதியிலும் வரிசைப்படுத்தி வழங்கும் நோக்கில் ஜெய்பீம் ஃபவுண்ட்டேஷன் ஒரு திட்டத்தைத் தொடங்கியது. ஜெய்பீம் ஃபவுண்ட்டேஷன் நிறுவனர் திரு. கௌதம சன்னா அவர்களால், ஊர்தோறும் அம்பேத்கர் படிப்பகம், ஊன்றுவோம் அம்பேத்கர் அறிவியம், விளங்க வைப்போம் விலங்கறுப்போம் என்ற கொள்கையுடன் 'அம்பேத்கரியம் 50' என்ற தலைப்பில் ஜெய்பீம் பதிப்பகம் வழியாக அம்பேத்கர் அவர்களின் எழுத்தும் பேச்சும் தொகுக்கப்படுகிறது. தமிழில் வெளிவரும் இத்தொகுதிகள் பின்னர் ஆங்கிலத்திலும் வெளிவர இருக்கிறது. இந்தத் தொகுதிகள் தமிழ் நாட்டில் உள்ள நூலகங்கள் அனைத்திலும், குறிப்பாகத் தமிழ் நாட்டில் உள்ள அனைத்துக் கிராமங்களிலும் உள்ள நூலகங்களிலும் இடம் பெற வேண்டும் என்ற குறிக்கோளுடன் அம்பேத்கரியம், அம்பேத்கர் எழுத்தும் பேச்சும் என 50 தொகுதிகளாக வெளிவருகிறது.

இந்தத் தொகுப்பில் அம்பேத்கர் கடிதங்கள் சிலவற்றை மொழிபெயர்க்கும் வாய்ப்பு எனக்குக் கிட்டியது. அவற்றில் குறிப்பாக இந்திய விடுதலைக்குப் பிறகு, பாகிஸ்தான்- இந்தியா பிரிவினை காலத்தில், பாகிஸ்தான் பகுதியில் சிக்கிக் கொண்ட பட்டியலின மக்கள் அங்கிருந்து வெளியேறுவது தடுக்கப்படுகிறது. இது அண்ணல் அம்பேத்கர் கவனத்திற்கு வருகிறது. அவர் இந்தியப் பிரதமர் ஜவஹர்லால் நேரு அவர்களின் கவனத்திற்குப் பட்டியலின மக்கள் நிலைமையைக் கொண்டுசென்று தக்க நடவடிக்கை எடுக்குமாறு கடிதம் மூலம் கோரிக்கை வைக்கிறார். அதற்குப் பிரதமர் ஜவஹர்லால் நேரு அவர்களும் தக்க நடவடிக்கைகள் எடுத்து ஆவன செய்வதாகக் கூறி பதிலளிக்கிறார். தமிழில் மொழிபெயர்க்கப்பட்ட இந்த இரண்டு கடிதங்களும் இங்கே கொடுக்கப்படுகிறன.



~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

புது தில்லி, டிசம்பர் 18, 1947.
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

*பாகிஸ்தானில் இருந்து வெளியேறி இந்தியாவுக்கு வரும் பட்டியலின சாதியினரிடமிருந்தும், அவ்வாறு இந்தியாவுக்கு வரவிடாமல் பாகிஸ்தான் அரசால் அடைத்து வைக்கப்பட்டு தடுக்கப்பட்டவர்களிடம் இருந்தும் எனக்குப் புகார்கள் பல வந்துள்ளன. அதனால் அவர்களின் துன்பங்களை உங்களுடைய கவனத்திற்குக் கொண்டுவரவேண்டிய நேரம் வந்துவிட்டதை உணர்கிறேன். அங்கு என்ன நடக்கிறது அடுத்து என்ன செய்யலாம் என்பது குறித்து உங்களுக்கு ஆலோசனை வழங்கும் நோக்கில், அவர்களின் துன்பங்களுக்கான காரணங்களையும் அவற்றை நீக்குவதற்காக எடுக்கப்பட வேண்டிய நடவடிக்கைகளையும் கீழே குறிப்பிடுகிறேன்.*

*I.*

*(1) பட்டியலின மக்கள் தங்கள் பகுதியில் இருந்து வெளியேறுவதை பாகிஸ்தான் அரசு எல்லா வழிகளிலும் தடுத்து வருகிறது. பட்டியலினத்தவர் குற்றேவலர்களாக பாகிஸ்தானில் தங்கியிருந்து, நிலமற்ற உழைப்பாளர்களாகிய அவர்கள் அங்குள்ள நில உடைமையாளர் களுக்குப் பணிசெய்து கொண்டிருக்க வேண்டும் என்று அவர்கள் விரும்புவதே இதன் பின்னணியில் உள்ள காரணமென எனக்குத் தோன்றுகிறது.*

*குறிப்பாக அவர்களின் வெளியேற்றத்தைத் தடுப்பதில் தீவிரமாக உள்ள பாகிஸ்தான் அரசு, துப்புரவுத் தொழிலாளர்களை இன்றியமையாத பணி செய்வோர் என்று அறிவித்து, அவர்கள் ஒருமாத முன்னறிவிப்புத் தராமல் பணியில் இருந்து அவர்களை விடுவிக்கத் தயாராக இல்லாத நிலைப்பாட்டை எடுத்துள்ளது.*

*(2) இராணுவ வெளியேற்றும் அமைப்பு என அறியப்படும் எம். இ. ஓ. அமைப்பு சிறிது பயன் தரும் வகையில் வெளியேற விரும்பும் பட்டியலின மக்களுக்கு ஓரளவு உதவி வருகிறது. இருப்பினும் பாகிஸ்தான் அரசு, வெளியேற விரும்பும் பட்டியலின மக்களுடன் எம். இ. ஓ. அமைப்பு நேரடித் தொடர்பில் இருப்பதை அனுமதிக்கவில்லை என்றும் நான் அறிகிறேன். இதன் விளைவாக, பட்டியலின மக்களை வெளியேற்றும் பணி மிகத் தொய்வடைந்த நிலையிலும், சில இடங்களில் முற்றிலும் தடைப்பட்டும் உள்ளது. மேலும், எம். இ. ஓ. அமைப்பும் விரைவில் மூடப்படவிருப்பதாகவும் எனக்குத் தெரியப்படுத்தப் பட்டுள்ளது. இது மட்டும் நேர்ந்தால், பட்டியலின மக்களை பாகிஸ்தானில் இருந்து வெளியேற்றுவது முற்றிலும் நடக்க இயலாமல் போகும்.*

*(3) தேவையான செயல்பாடுகள்:*

*(i) வெளியேற விரும்பும் பட்டியலின மக்களுக்கு எவ்விதத் தடையையும் ஏற்படுத்த வேண்டாம் என்று பாகிஸ்தான் அரசைக் கேட்டுக் கொள்ள வேண்டும்;*

*(ii) எம்.இ.ஓ. அமைப்பினர் வெளியேற விரும்பும் பட்டியலின மக்களுடன் நேரடித் தொடர்பில் இருப்பதை அனுமதிக்க வேண்டும்;*

*(iii) அனைத்துப் பட்டியலின மக்களும் வெளியேறும் வரை எம்.இ.ஓ. செயல்பட வேண்டும்.*

*(4) இதுவரை, மேற்கு பஞ்சாப் பகுதிக்குப் பட்டியலினப் பிரிவில் இருந்து ஒரே ஒரு ஒரு அதிகாரியை மட்டுமே நிவாரணம் மற்றும் மறுவாழ்வு அமைச்சகம் நியமித்துள்ளது. ஆனால், பாகிஸ்தானின் மற்ற மாகாணங்களான வடமேற்கு எல்லைப்புற மாகாணம், சிந்து மற்றும் பவல்பூர் போன்ற எஞ்சியுள்ள பகுதிகளுக்கு அவற்றுக்கென எந்த அதிகாரியும் நியமிக்கப்படவில்லை. இப்பகுதிகளுக்கு விரைவில் அதிகாரிகள் நியமிக்கப்பட அமைச்சரகம் உத்தரவிட்டு, சிறப்பு அதிகாரிகளைப் பாகிஸ்தான் பகுதியில் களப் பயணம் மேற்கொள்ளச் செய்து அதன் மூலம் வெளியேற விரும்பும் பட்டியலின மக்களுக்குத் தடை செய்யப்படும் பகுதிகள் கண்டறியப்பட வேண்டும்.*




*II.*

*பாகிஸ்தானில் இருந்து வெளியேறி கிழக்குப் பஞ்சாப் பகுதிக்கு வந்துள்ள பட்டியலின மக்கள் குறித்து, அவர்களிடம் இருந்தும் புகார்கள் கிடைத்துள்ளன. அவை பாகிஸ்தானில் இருந்து வெளியேறத் தடை செய்யப்பட்டுள்ள பட்டியலின மக்கள் அனுப்பிய புகார்களையும்விட அதிக எண்ணிக்கையில் உள்ளன. அவற்றை நான் கீழே பட்டியலிட்டுள்ளேன்:*

*(i)*

*(1) கிழக்குப் பஞ்சாப் பகுதிக்கு வந்துள்ள பட்டியலினப் பிரிவு அகதிகள் இந்திய அரசு ஏற்படுத்தியுள்ள அகதிகள் முகாம்களில் குடியிருக்கவில்லை.*

*அகதிகள் முகாமிற்குப் பொறுப்பேற்றுள்ள அதிகாரிகள் சாதி இந்து அகதிகளுக்கும் பட்டியலின அகதிகளுக்கும் இடையில் பேதம் காட்டுவதே இதற்குக் காரணம்.*

*(2) அகதிகள் முகாம்களில் தங்கியிருப்பவர்கள் மட்டுமே உணவு, உடை போன்ற நிவாரணங்களைப் பெறலாம் என்று நிவாரண மற்றும் மறுவாழ்வுத் துறை ஒரு விதி ஏற்படுத்தியுள்ளதாகத் தெரிகிறது. மேற்கூறப்பட்ட காரணத்திற்காக, பட்டியலின மக்கள் அகதிகள் முகாமில் தங்காத காரணத்தால், அந்த அகதிகளுக்கு எந்த நிவாரணமும் கிடைப்பதில்லை. இது மிகத் துயரமானது.*

*(3) இந்தப் பாகுபாட்டைத் தடுக்க இயலாது என்பதால், முகாம்களில் வாழும் அகதிகளுக்கு இணையாக அவர்களுக்கு வழங்கப்படும் நிவாரணங்களைப் போன்று அதே அளவு நிவாரணங்களை அகதி முகாமில் குடியிருக்காத பட்டியலின அகதிகளும் அவர்களுக்குரிய உதவிகளைப் பெறும் வகையில் விதியில் மாற்றம் செய்யப்பட வேண்டிய தேவையுள்ளது.*



*(ii)*

*(1) கிழக்குப் பஞ்சாப் அரசு நிலங்களை ஒதுக்குவதில் பட்டியலின மக்களின் நலன்கள் முற்றிலும் புறக்கணிக்கப்பட்டுள்ளது. முற்றிலுமாக சாதி இந்துக்களின் கைகளில் கிழக்கு பஞ்சாப்பின் நிர்வாகம் இருப்பதால், பட்டியலின அகதிகளின் மறுவாழ்வில் தனிப்பட்ட அக்கறை செலுத்துவோரும் எவருமில்லை, அதற்குப் பொறுப்பேற்கும் வகையில் இந்திய அரசு ஏற்படுத்திய நிறுவனங்களும் ஏதுமில்லை, குறிப்பாக இக்கடமையை கிழக்குப் பஞ்சாப் அரசாங்கத்தின் கவனத்திற்குப் பட்டியலின மக்களின் நலன்கள் குறித்து, கொண்டு செல்வதும் புறக்கணிக்கப் பட்டுள்ளது.*

*(2) ஆகவே, இந்திய அரசு கிழக்குப் பஞ்சாபில் ஏராளமான அதிகாரிகளை நியமித்து அவர்களின் சிறப்புப் பொறுப்பாக, நில ஒதுக்கீடு நியாயமான முறையில் செய்யப்படுவதையும், பட்டியலின அகதிகள் அவர்களுக்குரிய முறையான பங்கைப் பெறுவதையும் மேற்பார்வை செய்வது இன்றியமையாதது.*

*(3) இதற்காக நியமிக்கப்பட்ட நபர்களின் நான் பட்டியலை மாண்புமிகு திரு. நியோகி அவர்களிடம் வழங்கியுள்ளேன், நான் அறிந்தவரை, இவர்கள் இந்தப் பணியைச் செய்வதற்கு மிகவும் தகுதியானவர்கள்.*

*(4) (அ) கிழக்குப் பஞ்சாபில் வாழும் பட்டியல் இனத்தவர்களை அவர்களின் சொந்த வீடுகளில் இருந்து வெளியேறுமாறு அங்கு ஆதிக்க நிலையில் இருக்கும் சீக்கியர்களும் ஜாட்களும் கட்டாயப்படுத்தி அவர்களின் வீடு அல்லது நிலங்கள் போன்ற சொத்துக்களை தங்கள் உடைமையாக்கிக் கொள்கிறார்கள் என்பது ஒரு கொடுமையான உண்மை. கிழக்குப் பஞ்சாபின் நீதித்துறையிலும் காவல்துறையிலும் சீக்கியர்களும் ஜாட்களும் நிறைந்திருக்கிறார்கள் என்ற எளிய காரணத்தால் பட்டியலின மக்கள் மீது நிகழ்த்தப்படும் கொடிய அடக்குமுறையில் இருந்து அவர்களுக்குத் தீர்வு கிடைப்பதில்லை. சீக்கியர்களும் ஜாட்களும் செய்யும் குற்றங்களை இயற்கையாகவே அவர்களது உறவும் சுற்றமும் பொருட்படுத்தாது அவர்களைப் பாதுகாப்பதால் பாதிக்கப்பட்ட பட்டியலின மக்களின் புகார்கள் கவனிக்கப்படுவதில்லை.*

*(ஆ) எனவே, கிழக்குப் பஞ்சாப் அரசு, பட்டியலினப் பிரிவில் இருந்து குறைந்தது 300 நபர்களை தங்களின் காவல் துறையின் ஊர்க்காவல் பணிக்கு அமர்த்துவதற்கு கட்டாயப்படுத்தப்பட வேண்டும் என்பது முற்றிலும் இன்றியமையாததாகும். அண்மைய நாளிதழ்களில் கிழக்குப் பஞ்சாப் அரசு, பட்டியலினத்தைச் சேர்ந்த 300 பேரைத் தங்கள் காவல் துறையில் பணிக்கமர்த்தியதாகச் செய்தி வெளியானது. விசாரித்துப் பார்த்ததில் அவர்கள் எல்லையோரக் காவல் பொறுப்பில் நியமிக்கப் பட்டுள்ளார்கள் என்றும் ஊர்க்காவல் பணிக்காக அல்லவென்றும் தெரிய வந்தது. பட்டியலின மக்களின் பாதுகாப்பிற்கு அவர்கள் பிரிவினரை கிழக்குப் பஞ்சாப் ஊர்க்காவல் படையில் பணிக்கமர்த்த வேண்டும். கிழக்குப் பஞ்சாபின் ஊர்க்காவல் பணியில் பட்டியலினத்தைச் சேர்ந்த ஒருவர் கூட இல்லை என்பது எனக்குத் தெரிவிக்கப்பட்டுள்ளது.*

*(5) (அ) கிழக்குப் பஞ்சாபின் நில வருவாய் அமைப்பு கிராமத்தில் வசிப்பவர்களை ஜமீன்தார்கள் மற்றும் கமினாக்கள் இரண்டு வகுப்புகளாகப் பிரித்துள்ளது. கிராம எல்லைக்குள் சொந்தமாக நிலம் வைத்திருக்கக் கூடிய நிலவுடைமை உரிமை பெற்றுள்ள குடும்பங்கள் ஜமீன்தார் பிரிவில்*

*சேர்க்கப்படுகிறார்கள். தாங்கள் வாழும் ஊரில் சொந்தமாக நிலத்தை வாங்கவோ வைத்திருக்கவோ உரிமையற்றவர்கள் கமினாக்கள் பிரிவினர். அவர்கள் வீடுகளும் ஜமீன்தார்களின் நிலத்தில் அமைந்தவை. அதனால் ஜமீன்தார்கள் ஒன்றிணைந்தால் கமினாக்களை அவர்கள் வாழும் வீட்டை விட்டும் கிராமத்தை விட்டும் கட்டாயப்படுத்தி வெளியேற்ற முடியும். இந்த நடைமுறை ஒவ்வொரு கிராமத்திலும் கமினாக்களை ஜமீன்தார்கள் தயவில் வாழ வைக்கிறது. கிழக்குப் பஞ்சாபின் அனைத்து கிராமங்களிலும் வாழும் பட்டியலின மக்கள் கமினாக்கள் பிரிவில் அடங்குவர். ஆகவே, அவர்கள் கிராமத்தின் ஜமீன்தார்களின் அடிமையாக வாழ்கின்றனர்.*

*(ஆ) எனவே, கிழக்குப் பஞ்சாப் அரசு அவர்களின் நில வருவாய் முறையை மாற்றுவதன் மூலம், ரயத்துவாரி முறைபோன்ற ஒரு முறையை நடைமுறைப் படுத்துவதன் மூலம் இந்த பேதத்தை முடிவுக்குக் கொண்டுவர வேண்டிய தேவையுள்ளது. அந்த நிலை ஏற்படுமானால் நிலவுடைமையைப் பொறுத்த அளவில் அனைத்து கிராம மக்களும் சமமான நிலை ஏற்படும்.*



*(6) (அ) விவசாயிகளை பணக் கடன் கொடுப்பவரிடம் இருந்து காப்பாற்றும் நோக்கில் நில உரிமை மாற்றச் சட்டம் கிழக்குப் பஞ்சாப் மாகாணத்தில் நடைமுறையில் உள்ளது. ஆனால், ஒரு விவசாயி என்பவர் குலம் சார்ந்தவர்; தொழில் சார்ந்தவர் அல்ல என்ற வரையறை கொண்டுள்ள இந்தச் சட்டம் தீமை நிறைந்த ஒரு சட்டம் என்பதில் சிறிதும் ஐயம் இருக்க வழியில்லை. இந்தச் சட்டத்தின்படி, விவசாயச் சமூகமாக அரசால் அறிவிக்கப்பட்ட சமூகத்தைச் சேர்ந்த ஒருவர் மட்டுமே விவசாயியாக கருதப்படுவார். எந்த ஒரு பட்டியலினத்தவரும் நிலத்தில் உழவு செய்பவராகவும், விவசாயத் தொழிலாளியாக இருந்தாலும், பழங்காலப் பஞ்சாப் அரசு, பட்டியலினப் பிரிவு மக்களை விவசாயச் சமூகமாக அறிவிக்கக் கூடாது என்பதில் மிகக் கவனமாக இருந்தது. இதன் விளைவாக, கிழக்கு பஞ்சாபில்*

*உள்ள பட்டியலின மக்களுக்கு நிலத்தை வாங்கவோ, உடைமையாகச் சொந்தங்கொள்ளவோ வழியின்றி நிலமற்ற உழைப்பாளர்களாக இந்து, சீக்கிய மற்றும் ஜாட் நிலவுடைமையாளர்களை வாழ்வாதாரத்திற்கு நம்பியிருக்கும் நிலைக்குத் தள்ளப்படுகிறார்கள். இது ஒரு கொடூரமான சட்டம், இச்சட்டம் சட்டப் புத்தகத்தில் தொடர்ந்து இருக்க அனுமதிக்கப்படக்கூடாது என்று நான் நினைக்கிறேன்.*

*(ஆ) கிழக்குப் பஞ்சாப் அரசிடம் 'விவசாயி' என்ற சொல்லின் வரையறையை திருத்தம் செய்து அதை ஒரு தொழிலாக மாற்றுமாறு கேட்டுக் கொள்ளப்பட வேண்டும், இதனால் விவசாயத்தை வாழ்வாதாரமாகக் கொண்டிருக்கும் எவர் ஒருவரும் சாதி இன வேறுபாடின்றி நிலத்தை வாங்கவும் உடைமையாகக் கொள்ளவும் உரிமை உள்ள விவசாயியாக மாற வழி ஏற்படும்.*

*பட்டியலின மக்கள் எதிர்கொள்ளும் துன்பங்களாக எனது கவனத்திற்குக் கொண்டுவரப்பட்ட எல்லாவற்றையும், அவற்றைக் களையும் முறைகளையும், அவை ஏற்றுக் கொள்ளப்பட்டால், தீர்வாக அமையும் என நான் கருதுவனவற்றையும் விவரித்துள்ளேன். இந்திய அரசின் கைகளில் சில தீர்வுகளும் மற்றும் சில கிழக்குப் பஞ்சாப் அரசின் கைகளிலும் உள்ளன. இந்திய அரசு விரும்பினால், அத்தகைய தீர்வுகளுக்கான முயற்சியை முன்னெடுப்பதில் எந்தக் கேள்வியும் இருக்க வழியில்லை. கிழக்குப் பஞ்சாப் அரசாங்கத்தின் கட்டுப்பாட்டில் இருக்கும் தீர்வுகள் குறித்து நடவடிக்கை எடுக்க இயலாத கையறு நிலையில் இருப்பதாக இந்திய அரசாங்கம் கருத வேண்டியதில்லை. ஏனெனில், இந்திய அரசு நிவாரணம் மற்றும் மறுவாழ்வுக்கான செலவுப் பொறுப்பை ஏற்பதால், அனைத்து வகுப்பு மக்களையும் நியாயமான மற்றும் சமமாக நடத்துவதற்கு இந்திய அரசு தேவையானதாகக் கருதும் நடவடிக்கைகளை மேற்கொள்ளுமாறு கிழக்குப் பஞ்சாப் அரசை நிர்ப்பந்திக்க அதற்குத் தார்மீக உரிமை உள்ளது. அதனால்தான், நான் இந்திய அரசின் நடவடிக்கைக்காகப் பரிந்துரை வழங்குகையில் கிழக்குப் பஞ்சாப் அரசாங்கத்தின் கைகளில் உள்ள தீர்வுகள் குறித்தும் குறிப்பிடத் தயங்கவில்லை. இதுவரை, முஸ்லிம்களின் பிரச்சனையில் இந்திய அரசு அனைத்து கவனத்தையும் அக்கறையையும் செலுத்தி வந்துள்ளது. பட்டியலின மக்களுக்கு எந்தப் பிரச்சனையும் இல்லை என்பதாகவோ அல்லது சிறப்புக் கவனம் தேவைப்படாத அளவுக்கு அவை மிகவும் சிறியதாகவோ கருதப்படுகிறது. பட்டியலினப் பிரிவினரின் பிரச்சனையைச் சிலர் குறிப்பிட விரும்பாமலிருக்கலாம், பட்டியலின மக்கள் குறித்து அக்கறையுள்ள எங்களுக்கு அந்தப் பிரச்சனை உள்ளது என்பதும், அது முஸ்லிம்களின் பிரச்சனையை விட மிகவும் தீவிரமானது என்பதும் தெரியும்.*

*பாகிஸ்தானிலும் இந்தியாவிலும் பட்டியலின அகதிகள் எதிர்கொள்ளும் பிரச்சனைகளை இந்திய அரசு புறக்கணித்து வருவதை பொதுமக்களின் கவனத்திற்குக் கொண்டு செல்ல பலமுறை நான் நினைத்ததுண்டு. வெளிப்படையான சில காரணங்களுக்காக நான் அவ்வாறு செய்வதைத் தவிர்த்து வந்தேன். மற்ற பிரச்சனைகளில் உங்கள் கவனம் ஆழ்ந்திருந்ததன் காரணமாக, இந்தப் பிரச்சனையில் உங்கள் மௌனம் குறித்து நான் எந்தப் புகாரும் செய்யவில்லை. ஆனால், இந்தப் பிரச்சனையில் உங்களின் தனிப்பட்ட கவனத்தைச் செலுத்தி, நிவாரணம் மற்றும் மறுவாழ்வுத்துறை அமைச்சரிடமும், இலாகா ஒதுக்கப்படாத அமைச்சரிடமும் இக்கடிதத்தில் நான் குறிப்பிட்டுள்ள என் பரிந்துரைகளையோ அல்லது இவற்றிலும் மேம்பட்ட நல்ல தீர்வுகளையோ முன்னெடுக்க ஆணையிட்டு, பட்டியலின மக்களின் துன்பங்களில் இருந்து அவர்களை விடுவிக்க நடவடிக்கை எடுக்குமாறு வலியுறுத்த வேண்டிய நேரம் வந்துவிட்டதாக நான் அஞ்சுகிறேன். இந்த விஷயத்தில் நீங்கள் உடனடியாக கவனம் செலுத்தினால் நான் நன்றியுள்ளவனாக இருப்பேன்.*

*தங்கள் உண்மையுள்ள,*
*(கையொப்பம்)-பி.ஆர். அம்பேத்கர்.*

பெறுநர்

*மாண்புமிகு பண்டித ஜவஹர்லால் நேரு,*
*இந்தியப் பிரதமர்,*
*புது தில்லி.*

```````````````

*பிரதம மந்திரி*
*இந்தியா*

*பிரதமர்*
*புது தில்லி,*
*டிசம்பர் 25, 1947.*

*என் அன்பான டாக்டர் அம்பேத்கர்,*
```````````````

பாக்கிஸ்தானில் இருந்து இந்தியாவிற்குப் பட்டியலின மக்களை வெளியேற்றுவது குறித்த உங்கள் டிசம்பர் 18 ஆம் தேதியிட்ட கடிதம் எனக்குக் கிடைத்தது.

பாக்கிஸ்தானில் இருந்து அவர்களின் இடம்பெயர்வுக்காக நாங்கள் எங்களால் இயன்றவரை அவர்களுக்கு உதவி வருகிறோம். அவர்கள் வெளியேறுவது, குறிப்பாக சிந்துவில் இருந்து, வெளியேறுவது தடுக்கப்படுகிறது. அங்குள்ள நம் உயரதிகாரி தொடர்ந்து இப்பிரச்சனையை எதிர் கொள்கிறார்.

நீங்கள் குறிப்பிட்ட மற்ற பிரச்சனைகளை கிழக்குப் பஞ்சாப் அரசுதான் தீர்க்க வேண்டும். பட்டியலின மக்கள் வெளியேறுவது குறித்து நாங்கள் நிச்சயமாக அவர்களுக்கு ஆலோசனை வழங்குவோம், மேலும் வெளியேறும் பட்டியலின மக்களுக்கு அனைத்து உதவியும் வழங்கிட ஏற்பாடு செய்வோம்.

மிக முக்கியமாக கிழக்குப் பஞ்சாப் அரசாங்கம் இது குறித்துப் பல தொல்லைகளை எதிர்கொண்டு திணறிவருவதால் நமக்கு கிழக்குப் பஞ்சாப் அரசாங்கத்துடன் இணைந்து செயலாற்றுவதில் சற்று சிரமங்கள் நேர்கின்றன. இதுகுறித்து எனது தனிக் கவனத்தைச் செலுத்துவதை நான் மகிழ்ச்சியுடன் செய்வேன், அத்துடன் சிறப்பு இலாகா ஒதுக்கப்படாத அமைச்சர் ஒருவரிடம் இப்பொறுப்பை ஒப்படைத்து அக்கறையுடன் கையாள கேட்டுக் கொள்வேன்.

தங்கள் உண்மையுள்ள,
கையொப்பம்/- ஜவஹர்லால் நேரு

பெறுநர்
மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்.

``````````````


``````````````

# தமிழரின் பாரம்பரிய உணவுப் பண்பாடு
## சிறுதானியங்களை முன்வைத்து...

***முனைவர் ச. சீனிவாசன்***



*பேராசிரியர் & தமிழ்த்துறைத் தலைவர்*
*ஸ்ரீ வெங்கடேஸ்வரா கல்லூரி*
*(தில்லிப் பல்கலைக்கழகம்)*
*புது தில்லி-110 021, இந்தியா.*
*மின்னஞ்சல்: drseenivasan@gmail.com*

***முன்னுரை***

*மனிதனின் அடிப்படைத் தேவைகள் உணவு, உடை, உறைவிடம் ஆகியனவாகும். இவற்றுள் முதன்மையானது உணவாகும். 'உணவு என்பது இயற்கையான நிலவியல் பரப்பில் கிடைக்கிற உயிர்வேதியியல் (Biochemical) பொருள் ஆகும். அது மனிதனின் உயிர்வாழ்வுக்குப் பயன்படுவது மட்டுமின்றி அவனது சமூக, பண்பாட்டினைச் சுட்டுவதாகவும் அமைகிறது. 'சாப்பிடும் உணவினை வைத்து மக்களை, பண்பட்ட நிலைத்த குடியா?, இல்லை நாடோடிக் குழுவா?' என்று கண்டறியலாம் என உணவின் வரலாற்றை வரையறுக்கிறார் ஆலன் டேவிட்சன் (Alan Davidson) என்னும் புகழ் பெற்ற உணவியல் ஆய்வாளர்.*

*பழங்காலத் தமிழர் உணவு முறைகளில் காய்கறி, பழங்களோடு புலால் உணவும் ஓர் அங்கமாகப் இருந்து வந்தது. வேட்டைச் சமூகத்தின் நீட்சியாக புலால் உண்ணும் பழக்கம் இன்றுவரை எல்லா இனக்குழு மக்களிடத்திலும் பரவலாகக் காணப்படுகிறது. மக்களுக்கு அவர்கள் சார்ந்து வாழும் பகுதியைச் சேர்ந்த உணவுதான் ஆரோக்கியத்தைத் தருபவை என்று உணவியல் நிபுணர்கள் கூறுகின்றனர். 'உணவுப் பழக்க வழக்கங்கள் ஒரு சமூகம் வாழும் பருவச் சூழ்நிலை, வாழ் நிலத்தின் விளை பொருட்கள், சமூகப் படிநிலைகள், உற்பத்தி முறை, பொருளாதார நிலை ஆகியவற்றைப் பொறுத்து அமையும்' என்பார் தொ. பரமசிவன். (2001: 14). உணவையும் சாதியையும் முன்வைத்து சமூக மானுடவியல் அறிஞர்கள் பலர் ஆய்வுகள் நிகழ்த்தியுள்ளனர். தென்னிந்தியக் கோவில்களில் தெய்வங்களுக்கு உணவு படைத்தல்முறை குறித்து சி.ஜே. ஃபுல்லரும் (Christopher John Fuller), தமிழ்ப் பிராமண சமூகத்தினரின் உணவு நடைமுறைகள் குறித்து அர்ஜூன் அப்பாத்துரையும் (Arjun Appadurai), தமிழக அடித்தள மக்கள் உணவு முறை குறித்து மைக்கேல் மொப்ஃபாத் (Michael Moffatt) என்ற அறிஞரும் ஆராய்ந்துள்ளனர்.*

*ஆதி மனிதனின் உணவு இலை, தளைகள், பழங்கள் முதலான இயற்கை சார்ந்தே அமைந்திருந்தது. வேட்டைச் சமூகம் உருவானபோது மனிதனின் பிரதான உணவாக இறைச்சி இடம்பிடித்தது. மனிதன் இறைச்சியைப் பதப்படுத்தாமலேயே உண்டு வந்தான். தீயை உண்டாக்கத் தெரிந்தவுடன் உணவைத் தீயில் சுட்டும், பக்குவப்படுத்தியும் உண்ணத் தொடங்கினான். நாகரீக காலத்தில் மனிதன் தனக்கான உணவைத் தானே உற்பத்தி செய்து கொண்டான். மனிதனின் வாழ்விடத்திற்குத் தக்கவாறு உணவுமுறையும் அமைந்தது. இயற்கையோடு இயைந்த தமிழர்களின் பாரம்பரிய உணவு முறையில் சிறுதானியங்கள் பிரதான பங்கு வகித்தன. 2023-ஆம் ஆண்டை 'சர்வதேச சிறுதானியங்கள் ஆண்டாக' ஐக்கிய நாடுகள் பொதுச்சபை அறிவித்திருப்பதை முன்னிட்டு அவற்றின் வரலாறு, மருத்துவ குணங்கள் மற்றும் அரிய பலன்களை முன்வைப்பதாக இக்கட்டுரை அமைகிறது.*

**உணவு: பிரபஞ்சத்தின் சுழற்சி**




*மனித இனத்தின் உணவுக் கலாச்சாரம் காலம் தோறும் மாறிவரும் தன்மையுடையதாகவும் இருக்கிறது. அந்தவகையில் தமிழர்கள் தங்கள் பாரம்பரிய சமையல் முறை மற்றும் உணவு முறை மூலம் தங்கள் பண்பாட்டை உலகிற்கு உணர்த்தியுள்ளனர். பாரம்பரிய உணவென்பது வாய்க்கு ருசியாகவும், வயிற்றுக்கு உகந்ததாகவும், உடலுக்கும் ஆரோக்கியம் அளிப்பதாகவும் அமைதல் வேண்டும். மனிதனின் உன்னத உணவின் இலக்கணம் இதுவே. உணவு உலகத்து உயிர்களனைத்தும் உயிர் வாழத் தேவையான பொருளாகவும் அமைந்திருப்பதால் அதனைத் தேடியோ அல்லது நோக்கியோ உயிர்களின் இயக்கங்கள் இருக்கின்றன. அதனால்தான் 'உணவு பிரபஞ்சத்தின் சுழற்சி; என்கிறது மைத்ரேய உபநிடதம்.*

**உணவும் அதன் வகைகளும்**

*நாம் உட்கொள்ளும் திடப்பொருட்கள் மற்றும் திரவப் பொருட்கள் அனைத்தையும் உணவு என்னும் பொதுச் சொல்லால் அழைக்கிறோம். உணவுப் பொருட்களைச் சமைக்கப்பட்டவை (cooked) சமைக்கப்படாதவை (raw) என்ற*

*இரு எதிர்வுகளாகப் பிரிக்கிறார் லெவிஸ்ட்ராஸ். (ச. பிலவேந்திரன், 2001:23). வட இந்திய செவ்வியல் இலக்கியங்கள் உணவு வகைகளை எட்டு வர்க்கங்களாகப் பாகுபாடு செய்கின்றன. அவற்றுள் 'சுகதயனா' என்னும் தானிய வகை முதலிடம் பெறுகின்றது.*

*தொல்காப்பியத்தில் "மெய் திரி வகையின் எண்வகை உணவில் செய்தியும் உரையார்" (தொல். பொருள்: மரபியல்- 623) என எண்வகை உணவு குறிக்கப்படுகிறது. தொல்காப்பியர் குறிப்பிடும் எண்வகை உணவுகளாக இளம்பூரணர் உரையில் நெல், காணம், வரகு, இறுங்கு, தினை, சாமை, புல், கோதுமை ஆகியவை இடம்பெறுகின்றன. பிங்கல நிகண்டு, உணவினை:*

*' உணாவேவல்சி உண்டி ஓதனம்*

*அசனம் பகதம் இசை ஆசாரம்*

*உரை ஊட்டம்'*

*என வகைப்படுத்துகிறது. பெருங்கதை, 'ஐவேறு அமைந்த அடிசிற் பள்ளியும்' என உணவினை ஐந்து வகையாகப் பகுக்கிறது.*

*பொதுவாக உணவின் தன்மை, உண்ணும் முறை, சுவை ஆகியவற்றின் அடிப்படையில் உணவுப் பாகுபாடு உருவாக்கப்பட்டது. அந்தவகையில், உண்பன, தின்பன, கொறிப்பன, நக்குவன, பருகுவன ஆகியவை நடைமுறையில் உள்ள உணவுமுறைகளாகும். பிங்கல நிகண்டு கொறித்தல், நக்கல், பருகல், விழுங்கல், மெல்லல் ஆகியவற்றை ஐவகை உணவாகக் கூறுகின்றது. இது, வடமொழியில் 'பஞ்ச பக்ஷய பரமான்னம்' என வழங்கப்படுகிறது.*

### ***தமிழர் உணவில் சிறு தானியங்கள்***

*சிறு தானியங்களாகத் தினை , சாமை, கம்பு, கேழ்வரகு (அல்லது) ராகி, குதிரைவாலி, காடைக்கண்ணி (பனிவரகு), வரகு, சோளம் ஆகியவற்றைப் பட்டியலிடலாம். இவை தோற்றத்தில் சிறுசிறு விதைகளாகக் காணப்பட்டாலும், இவற்றின் மேற்புறம் கடினத் தன்மை கொண்டவை. நன்செய் நிலப் பயிர்களான இவை தாம் உயிர்வாழத் தேவையான நீரை நிலத்தடியில் தேடிப்பிடித்துக் குடிக்கும் வல்லமை பெற்றவை.*

*இந்திய மக்களின் உணவுக் கலாச்சாரத்தைச் சற்று ஆழ்ந்து நோக்கினால் அதில் சிறு தானியங்களின் முக்கியப் பங்கை நம்மால் புரிந்துகொள்ள முடியும். சிறு தானியங்களின் சிறப்பை,*

*"அது கனமாக இருந்தது உயரமாக இருந்தது*

*முளைவிட்டது கதிர்விட்டது*

*காற்றில் அசைந்தாடியது*

*கருப்பு வெள்ளை வெளிர் சிவப்பில்*

*சொல்லப்போனால்*

*இந்த அதிர்ஷ்டவசமான தானியங்கள்*

*நமக்காகவே மேலிருந்து*

*அனுப்பி வைக்கப்பட்டன''*

*எனச் சீன நாடோடிப்பாடல் ஒன்று சித்திரிக்கிறது.*

*''காடு வெட்டி கல் பொறுக்கிக்*

*கம்பு, சோளம், தினை விதைத்து – காட்டைக் காக்க கண் விழித்தார்களாம்*

*கம்பு நல்லா விளைஞ்சு கதிர்விடும் நாளையிலே – கம்பைத் தின்ன*

*குட்டி காட்டுக்கிளி பறக்குதடி!'.*

*என்ற நாட்டுப்பாடல் வழி நம்முடைய பாரம்பரியம் மிக்க சிறுதானியங்களான கம்பு, சோளம், தினை, குதிரைவாலி போன்ற புரதம் மிக்க சிறுதானியங்களின் பெருமையைக் காண்கிறோம். (balhanuman.wordpress & ரமா ரகுநாதன், மங்கையர் மலர்)*

*பழந்தமிழ் இலக்கியங்களில் சிறு தானியங்கள்*

> *''கருங்கால் வரகே இருங்கதிர்த் தினையே*
> *சிறுகொடிக் கொள்ளே பொறிகிளர்*
> *அவரையொடு*
> *இந்நான்கல்லது உணாவும் இல்லை'' (புறம்- 335; 4-6 )*

*என்று மாங்குடிக் கிழார் சிறு தானியங்களின் சிறப்பை உயர்த்திப் பாடியுள்ளார்.*

*சிறு தானியங்கள் 'கூலம்' என இலக்கியங்களில் வழங்கப்படுகின்றன. சிறு தானியங்கள் குறிஞ்சி, முல்லை என்ற இரு நிலப்பகுதிகளிலும் பயிரிடப்பட்டன. சிறுதானியங்கள் பயிரிடப்பட்ட நிலம் புன் / புன்புலம் / கானம் என்று அழைக்கப்பட்டது. சிறு தானியங்களை, மழையை நம்பி விளையும் மானாவரிப் பயிர்கள் அல்லது புஞ்சை நிலப் (புன்செய்) பயிர்கள் என்றும் கூறுவர். வன்புலத் தவசங்கள் என்றும் அழைக்கப்படுகின்றன. இப் புன்புலங்களில் வறட்சியைத் தாங்கி விளையக்கூடிய இத்தானியங்களே பண்டைத் தமிழர்களின் பாரம்பரிய*

*உணவாக இருந்துள்ளன. மானாவாரியாக விளையக்கூடிய இத்தானியங்கள் உருவத்தில் சிரியனவாக இருப்பதால் 'சிறுதானியங்கள்' அல்லது 'குறுதானியங்கள்' என வழங்கப்படுகின்றன. புல் பயிரினத்தில் விளைந்த இவற்றிற்குத் 'தவசம்' என்ற பெயரும் உண்டு. 'தானியம்' என்பது 'தானியா' என்கிற வடமொழிச் சொல்லிலிருந்து வந்ததாகவும் 'தவசம்' என்பதே தமிழ்ச் சொல் என்கிறார் தேவநேயப் பாவாணர்.*

*சங்கத்தமிழ் இலக்கியங்கள் சிறுதானியங்களைப் போற்றிப் பாடியுள்ளன. புறநானூறும், ஆற்றுப்படை நூல்களும் சிறுதானியங்கள் குறித்து விரிவாக விளக்கியுள்ளன. மென்தினை (119:4), புனைத்தினை (143:5), பரூஉக்குரல் சிறுதினை (168:6), உணங்குதினை(320:10), குரல் உணங்கு விதைத்தினை (335 :12 ), இருங்கதிர்த் தினை (3 35:4) எனத் தினை புறநானூற்றில் பாடப்பெற்றுள்ளது. புன்புல வரகு (34:9/197:12), கவைக்கதிர் வரகு (215:1), கலிஆர்வரகு(321:6), கருங்கால்வரகு (384:4), வெள்ளை வரகு (327:2) என வரகு குறித்த செய்திகள் புறநானூற்றில் காணக்கிடைக்கின்றன. சவ்வாது மலையின் அடிவாரத்தில் குறிஞ்சி நிலச் சிற்றூர்களில் வாழ்ந்த மக்கள் தினைச் சோறும் நெய்யில் சமைத்த இறைச்சியும் உண்டார்கள் என்று மலைபடுகடாம் (168:169) குறிப்பிடுகின்றது. முல்லை நில மக்கள் பாலையும் தினை அரிசிச் சோற்றை உண்டதாகவும் (167-168), வரகரிசியுடன் அவரைப் பருப்பு கலந்து செய்த 'கும்மாயம்' என்ற உணவை உண்டதாகவும் (192-195) பெரும்பாணாற்றுப்படை தெரிவிக்கின்றது. புஞ்சை நிலமான மானாவாரி வேளாண்மை பிற நில மக்களால் இழிவாகப் பேசப்பட்டதையும் புறநானூறு பதிவு செய்துள்ளது.*

***தமிழர் பண்பாட்டில் சிறு தானிய உணவுகள்***

*தமிழர்களின் பாரம்பரிய உணவுப் பண்பாட்டில் சிறு தானியங்களும், சிறு தானிய உணவுகளும் பெரும் பங்கு வகித்திருக்கின்றன. இன்று நாம் உணவிற்காகப் பயன்படுத்திவரும் அரிசி, கோதுமைக்கு மாற்றாக சிறுதானியங்கள் விளங்கியிருக்கின்றன. நம் முன்னோர்கள் காலங்காலமாக உண்டு வளர்ந்தது சிறுதானிய உணவுகளையே ஆகும். தமிழர்களின் பிரதான உணவாகச் சிறுதானியங்களே விளங்கியிருக்கின்றன. இவை இந்தியாவில் மட்டும் விளைவிக்கப்பட்ட, உண்ணப்பட்டவை அல்ல. நம் முன்னோர்கள் அடையாளம் கண்ட உயிர்காக்கும் அற்புத அமுதமாகும்.*

***இறைவழிபாட்டில் சிறுதானியங்கள்***

*இறை வழிபாட்டிலும் சிறு தானியங்களின் பங்கு இருந்திருக்கிறது. முருகக் கடவுளுக்குத் தினை மாவும், திருமாலுக்குத் தினைப் பாயாசமும் படைக்கப்பட்டன. ஆழ்வார் திருநகரி ஆதிநாதர் கோவிலில் நம்மாழ்வாருக்குத்*

தேனும் தினை மாவும் படைக்கப்படுகின்றன. குறிஞ்சித் திணை வெறியாட்டிலும், திருமுருகாற்றுப்படை வழிபாட்டிலும் தினைக்கு முக்கியத்துவம் தரப்பட்டுள்ளது. கோவில் கலசங்களில் சிறு தானியங்களை நிரப்பி வைப்பது வேளாண்மை தொடர்பான வளமையாகவும், பாதுகாப்பு முறையாகவும் இருந்து வந்திருக்கிறது. நவீன காலத்தில் இருப்பது போல் அந்தக் காலத்தில் எந்த ஊரிலும் இடிதாங்கிகள் என்பது எதுவும் இருந்ததில்லை. உயரமாக இருக்கும் கோயில் கோபுரங்களே இடிதாங்கிகளாக விளங்கின. கோபுரத்தின் உச்சியில் உள்ள கலசங்களில் நிரப்பப்படும் நவதானியங்கள் இடியை உள்வாங்கிப் பாகுகாப்பளித்து வருகின்றது. நவதானியங்கள் பன்னிரெண்டு ஆண்டுகள் வரை மட்டுமே சக்தி கொண்டவை. கலசங்களில் உள்ள நவதானியங்களை பன்னிரெண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை மாற்றி மீண்டும் புதிதாக நிரப்புகிறார்கள். கோயில் கும்பாபிஷேகங்கள் பன்னிரெண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை நிகழ்த்தப்படுவதன் அறிவியல் உண்மை இதுதான்.



**வளமைச் சடங்கில் சிறுதானியங்கள்**

பூப்பெய்தும் பெண்களுக்குத் தினை மாவிடித்து அதில் நல்லெண்ணெய் ஊற்றி உண்ணக் கொடுப்பது தமிழக நாட்டுப்புற மக்களிடம் இன்றும் வழக்கில் உள்ளது. சிறு தானியங்களைப் பயிரிடும் வேளாண் முறைகளைத் தமிழகப் பழங்குடி மக்கள் தெரிந்து வைத்திருப்பதுடன் இன்றும் பயன்படுத்தி வருகின்றனர். சிறு தானிய உணவுகளை உட்கொள்ளும் செயல்பாடுகளும் தமிழகப் பழங்குடிகளிடம் நடைமுறையில் உள்ளது. கம்பு, பனிவரகு, குதிரைவாலி ஆகிய சிறு தானிய வகைகள் குறித்துச் சில தொல்லியல் சான்றுகளும் கிடைத்துள்ளன. நமது உடலுக்கு நன்மை அளித்து விவசாயத்துக்கும் அனுகூலமாக இருந்ததாலேயே சிறு தானியங்களுக்கு பழந்தமிழகத்தில் அவ்வளவு முக்கியத்துவம் இருந்திருக்கிறது. புஞ்சை நிலத்தில்

விளையும் சிறு தானியங்களைத் தவசம் என்ற தமிழ்ச் சொல்லால் அழைக்கும் வழக்கு தமிழக நாட்டுப்புற மரபில் இன்றும் நடைமுறையில் உள்ளது.

**பசுமைப்புரட்சியின் விளைவு**

'பழந்தமிழ் இலக்கியங்களிலும், பண்பாட்டிலும் சிறப்பிக்கப் பெற்ற புஞ்சை நிலப் பயிர்களான மானாவாரிப் பயிர்கள் பசுமைப் புரட்சியால் புறம் தள்ளப்பட்டன' என்று பன்னாட்டு உணவுப் பயிர்கள் ஆய்வு நிறுவனத்தின் *(International Crops Research Institute for Semi-Arid Tropics- ICRISAT)* தலைமை இயக்குநர் வில்லியம்தார் *(William Dar)* கூறியிருப்பது இவ்விடத்தில் நினைவு கூரத்தக்கது. நஞ்சை நிலப் பயிர்களுக்கு உள்ள விலைப் பாதுகாப்பு புஞ்சை நில மானாவாரிப் பயிர்களுக்கு இல்லை என்பதால் அவற்றின் உற்பத்தியும், அவற்றைச் சாகுபடி செய்யும் நிலப்பரப்பும் ஒன்றுக்குப் பாதியாகக் குறைந்துவிட்டது என்று குற்றம் சாட்டுகிறார் இயற்கை வேளாண் விஞ்ஞானி ஆர்.எஸ். நாராயணன்.

**செயற்கை உணவின் பாதிப்பு**

பாரம்பரியமான இந்தச் சிறு தானியங்கள் இன்றைய தலைமுறையினரால் கைவிடப்பட்டு தமிழர் உணவு முறையிலிருந்து விலகி வழக்கொழிந்து காணாமல் போய்விட்டன. சுற்றுச் சூழல் மற்றும் பருவநிலை மாற்றங்களால் மழை பெய்வதிலும் முறை மாற்றம் ஏற்பட்டுள்ளது. இதன் தாக்கம் மழையை நம்பி விளையும் மானாவாரிப் பயிர்களையும் பாதித்துள்ளது. மானாவாரிப் பயிர்களான சிறு தானியப் பயிர்களை விளைவிக்கும் விவசாயிகளும் மிகமிகக் குறைவே. விளைவு கேள்விப்படாததும் விநோதமுமான நோய்கள் மக்களைத் தாக்குகின்றன. நமது பாரம்பரிய உணவான சிறு தானியங்களைக் கைவிட்டு நவீன உணவு முறைக்கு மாறியதால் ஏற்பட்டதன் பலன் இது !.

ஊட்டச்சத்து நிறைந்த இயற்கையான இச் சிறு தானியங்களை உண்ட நம் முன்னோர்களாகிய தமிழர்கள் மூன்று தலைமுறைகளைக் கண்டு நீண்ட காலம் வாழ்ந்துள்ளனர். அவர்களுடைய சமச்சீரான உணவு முறையும் உடல் உழைப்புமே இதற்குக் காரணம். 'உணவே மருந்து' என்று முன்னோர்கள் கூறியதன் ரகசியம்



*இதுவே. இன்றைய மக்களின் சராசரி வயது ஒரு தலைமுறையைக் கூடத் தொடமுடியாத நிலையிலேயே உள்ளது. இந்நிலைக்குக் காரணம், இயற்கையோடு இயைந்த தமிழர்களின் பாரம்பரிய உணவான சிறுதானிய உணவை விடுத்துச் செயற்கை உணவை உட்கொள்வதே ஆகும். நம் உடல் நலத்திற்கு அதிகம் கேடு விளைவிப்பது துரித உணவுகளே (Fast Food) ஆகும். குழந்தைகள் மற்றும் பதின் பருவத்தினரின் (Teen Age) அதீத உடற் பருமனுக்குத் துரித உணவுகளை உட்கொள்வதே காரணம் எனக் கண்டறியப்பட்டுள்ளது.*

***சமகால நிலைமை***

*தமிழர்கள் சிறு தானிய உணவின் முக்கியத்துவத்தைத் தாமதித்தேனும் உணர ஆரம்பித்துள்ளனர். தமிழர்களின் உணவுமுறையில் சிறு தானியங்களின் மறுபிரவேசம் நிகழ்ந்துகொண்டிருக்கிறது என்று கூறலாம். மக்கள் மத்தியில் சிறு தானியங்களுக்கு மீண்டும் மவுசு கூடியிருக்கிறது. மக்களின் கவனம் சிறு தானியங்களின் மீது திரும்பியுள்ளது. சிறு தானியங்களின் மருத்துவக் குணங்களையும், முக்கியத்துவத்தையும் உணர்ந்து கொண்ட பெருநகர வாசிகள் அவற்றைத் தேடி அலையும் சூழல் ஏற்பட்டுள்ளது. மக்கள் பெருமளவில் காதி, சர்வோதயா மற்றும் ஆர்கானிக் கடைகளை நோக்கிப் படையெடுத்து வருகின்றனர். அண்மைக்காலமாக, சென்னை, கோவை, மதுரை, திண்டுக்கல், சேலம் போன்ற நகரங்களில் சிறுதானிய விற்பனையகங்களும், சிறுதானிய உணவகங்களும் பெருகிவருகின்றன. சிறு தானியங்களை விளைவிக்க விவசாயிகளும் இப்பொது முன்வந்துள்ளனர். மத்திய-மாநில அரசுகள் மானாவாரி உணவுப் பயிர்களை ஊக்குவிக்கத் தொடங்கியுள்ளதோடு, சிறுதானிய உணவுத் தின்பண்டங்களுக்கு முக்கியத்துவம் அளிக்கவும் ஆரம்பித்துள்ளது. சிறுதானியங்கள் பிரபலப்படுத்தப்படுத்துவதை மக்கள் இயக்கமாகக் கொண்டு செயல்பட வேண்டும் என்று பாரதப் பிரதமர் வலியுறுத்தியுள்ளார்.*

*சிறு தானியங்களை ஏழைகளின் உணவு என்று சொல்வார்கள். இன்று அவை வசதியானவர்கள், நகர்ப்புறவாசிகள், மேட்டுக்குடியினர், மற்றும் நோயாளிகள் உணவாக மாறியுள்ளது. இந்தியாவின் அனைத்துப் பகுதிகளிலும் தங்களுக்கே உரிய பாரம்பரிய உணவு முறைகளும் கலாச்சாரங்களும் காணக்கிடைக்கின்றன.*

***சிறு தானிய உணவின் பெரும்பலன்கள்***

*சிறு தானிய உணவில் மனித உடல்நலத்திற்குத் தேவையான பல நன்மைகள் உள்ளன. மாவுச்சத்து என்னும் கார்போஹைட்ரேட் தான் இதில் முதன்மையானது. சிறுதானிய உணவில் மனித உடலுக்கு மிகவும் அடிப்படைத் தேவையான புரதச் சத்துகள், செரிமானத்துக்குத் தேவையான நார்ச்சத்துகள்,*

*உடலுக்கு ஊட்டம் தரும் வைட்டமின் சத்துகள், தாது உப்புகள், நுண்ணூட்டச் சத்துகள் அதிகம் நிறைந்துள்ளன. சிறுதானிய உணவுகள் ஜீரண சக்தியை அதிகரிக்கும், உடலில் தேவையற்ற கொழுப்புகளை அகற்றும், உடல் பருமனைக் குறைக்கும், வயிற்றுப் புண் மற்றும் வாய் துர்நாற்றத்தைப் போக்கும், பெண்களுக்கு மாதவிடாய்க் கோளாறுகளைச் சமன்படுத்தும், உடல் வெப்பநிலையை சமநிலைப் படுத்தும், பாலூட்டும் தாய்மார்களுக்குத் தாய்ப்பாலை அதிகரிக்கும் தன்மை கொண்டவை. சிறுதானிய உணவிலுள்ள மாவுச்சத்து ரத்தத்தில் குறைவாகக் கரைந்து நீரிழிவு மற்றும் ரத்த அழுத்தத்தைக் கட்டுப்படுத்தும். மலச்சிக்கலைப் போக்கி, ஆண்களுக்கு உயிரணுக்களை அதிகரிக்கும் தன்மை கொண்டது.*

*சிறு தானியங்கள் குறைந்த நீரில் விளையும் தன்மை கொண்டவை. மானாவாரி மற்றும் வறண்ட நிலப்பகுதிகளிலும் செழிப்புடன் வளரக்கூடியவை. காய்கறி மற்றும் நிலக்கடலை போன்றவற்றுடன் கலப்புப் பயிராகவும், ஊடுபயிராகவும் வளர்ந்து உபரி வருமானத்தை ஈட்டித் தருபவை. சிறுதானியங்களை விளைவிக்க மிக எளிய தொழில் நுட்பம், மிகக் குறைந்த இடுபொருள் போதுமானதாகும். ரசாயனம் மற்றும் பூச்சிக்கொல்லிகள் அதிகம் தேவையில்லை. குறுகிய காலப் பயிர்கள் வரிசையில் சிறு தானியங்கள் முதலிடம் பெறுகின்றன. சிறுதானியப் பயிர்கள் மண்வளத்தைக் காப்பதோடு மண் அரிப்பையும் தடுக்கும் தன்மை கொண்டவை. சிறுதானியக் கதிர்கள் ஒவ்வொன்றும் நூற்றுக்கணக்கான தானிய மணிகளைக் கொண்டவை.*

*குறைந்த எரிபொருளில் சிறு தானிய உணவைச் சமைக்க முடியும். சிறுவர்கள், பெண்கள், முதியவர்கள், நோயாளிகள் என அனைத்து தரப்பினர்க்கும் உகந்த நுண்ணூட்டச்சத்து கொண்டதாகச் சிறு தானியங்கள் விளங்குகின்றன. சிறு தானியங்களில் இருந்து கிடைக்கும் பொதுவான பலன்களாக, சிறப்புக்களாக இவற்றைக் கொள்ளலாம்.*



**சிறுதானியங்கள் : வரலாறும் மருத்துவ குணங்களும்**

*‘சிறு தானியங்கள் கிழக்காசியாவைப் பூர்வீகமாகக் கொண்டவை. சுமார் பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முன் கிழக்காசிய நாடுகளில் இவை பயிரிடப்பட்டன. ஆபிரிக்கக் கண்டத்திலுள்ள சூடான்*

*நாட்டில் மக்கள் தங்கள் தினசரி உணவில் சிறு தானியங்களை அதிக அளவில் பயன்படுத்திவருகின்றனர்'. (டாக்டர். A. B. பரூக் அப்துல்லா, 2016.) நன்செய் நிலத்தில் விளையும் அரிசியைத் தவிர்த்து புன்செய் தானியங்களை உண்ணும்படி மருத்துவர்கள் பரிந்துரைக்கின்றனர். சிறுதானியங்களில் நார்ச்சத்து, தாது உப்புக்கள், கால்சியம், இரும்புச் சத்து, பாஸ்பரஸ் முதலான உலோகச்சத்துகள் இருப்பது இதற்குக் காரணமாகக் கூறப்படுகிறது. சிறுதானியங்கள் கடுமையான பஞ்சகாலத்திலும் இரு போகம் விளையக்கூடிய தன்மை கொண்டவை. நீர்ச் சிக்கனப் பயிர்களாகவும் சிறுதானியங்கள் விளங்குகின்றன. சிறு தானியங்கள் உருவத்தில் சிறுசிறு விதைகளாகக் காணப்படுவதாலும் குறைந்த இடத்தில் விளைவதாலும் 'Minor Millets' எனப் பெயரிடப்பட்டது. அதையே 'சிறுதானியங்கள்' எனத் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது.*

**சிறுதானியங்களின் சிறப்புகள்**

*உண்மையில் சிறுதானியங்களைச் 'சத்துமிகு தானியங்கள்' எனக் குறிப்பிடுவதே சரியானதாகும் என்கிறார் இயற்கை வேளாண் விஞ்ஞானி நம்மாழ்வார். கோவில்களிலுள்ள உயரமான கோபுரங்களில் அமைந்திருக்கும் கலசங்களுக்கும் சிறு தானியங்களுக்கும் அறிவியல் பூர்வமான தொடர்பு இருக்கிறது. தங்கம், வெள்ளி, ஐம்பொன்னால் செய்யப்பட்ட கோபுரக் கலசங்களுக்கும் சிறுதானியங்களான நெல், கம்பு, கேழ்வரகு, தினை, வரகு, சோளம், மக்காச்சோளம் சாமை ஆகியவற்றுக்கும் மின்காந்த அலைகளை ஈர்க்கும் சக்தி கொண்டவை எனக் கருதப்படுகிறது. அதனாலேயே, கோபுரக் கலசங்களில் சிறுதானியானகளில் கொட்டிவைத்தார்கள் நாம் முன்னோர்கள். சிறுதானியங்கள் பன்னிரெண்டு ஆண்டுகள் வரை உயிர்ச்சத்து உடையவை, அதன்பிறகு அவை செயலிழந்து விடும். கோவில்களில் குடமுழுக்கு என்ற பெயரில் கோவில்க் கலசங்களில் உள்ள தானியங்கள் பன்னிரெண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை நீக்கப்பட்டு புதுத் தானியங்கள் நிரப்படுவதன் நோக்கமும் அறிவியல் அடிப்படையானதே. அடைமழைக் காலங்களில் தானியங்கள் அனைத்தும் நீரில் மூழ்கி அழிந்துபோக நேரிட்டால், உயரமான கோபுரத்தில் பாதுகாத்து வைக்கப்பட்ட தானியங்களை எடுத்து விதைத்துக்கொள்ளலாமென்ற முன்னோர்களின் தொழில்நுட்பம் வியப்புக்குரியதாகும். இத்தகைய சிறப்புகளுக்குரிய சிறு தானியங்கள் ஒவ்வொன்றிற்கும் தனித்தனியான வரலாறும், சிறப்பு மருத்துவக் குணங்களும் உண்டு. அவை:*

***தினை (Foxtail:Millet):***

*வரலாறு : இந்தத் தானியம் உலகம் முழுவதும் பயிரிடப்படுகிறது. உலகிலேயே அதிகம் பயிரிடப்படும் தானிய வகைகளில் தினை இரண்டாவது இடத்தைப் பெற்றுள்ளது. கிழக்கு ஆசியாவில் பயிரிடப்படும் தானிய வகைகளில் தினையும்*

ஒன்று. தெற்காசியாவில் பத்தாயிரம் ஆண்டுகளுக்கும் மேலாகத் தினை பயிரிடப்பட்டு வருகிறது. தினை உற்பத்தியில் சீனா முதல் இடத்தையும் இந்தியா இரண்டாமிடத்தையும் வகிக்கிறது. தினையில் அரிதினை, செந்திணை, பெருந்தினை எனப் பல ராகங்கள் உள்ளன. இறடி, ஏனல், கங்கு என்ற வேறு பெயர்களும் தினைக்கு உண்டு. தினைக்கதிர் தோற்றத்தில் நரி வாலைப் போல இருப்பதால் ஆங்கிலத்தில் இதனை *'Fox Tail Millet'* என்று அழைக்கப்படுகிறது.

**மருத்துவ குணங்கள் :**

தினை புரதச் சத்து, நார்ச் சத்து, கொழுப்புச் சத்து, கனிமச் சத்து, இரும்புச் சத்து மற்றும் பீட்டா கரோட்டின் *(Beta-Carotene)* நிறைந்தது. தினையில் செய்யப்படும் உணவுகள் நீரிழிவு நோயாளிகளுக்கு மிகவும் நல்லது. குழந்தை பெற்ற தாய்மார்களுக்குத் தினையைக் கூழாக்கித் தருவது தமிழர் மரபாக உள்ளது. தினை உணவைச் சமைப்பது மிகவும் எளிது. வாயுத் தொல்லையைச் சரி செய்யும், எலும்புகளை வலுவாக்கும், குடல் புண் மற்றும் வயிற்றுப் புண்களைக் குணமாக்கும் குணங்கள் தினை உணவுக்கு உண்டு. தினையில் தயாரிக்கப்படும் உணவுகள் எளிதில் செரிமானம் ஆகக்கூடியயவை.

**குதிரைவாலி *(Barnyard Millet):***

வரலாறு : புன்செய் நிலங்களில் விளையக்கூடிய தானியம் இது. குறைந்த நாட்களில் நிறைந்த விளைச்சல் தரக்கூடியது. இப்பயிரின் கதிர், குதிரையின் வால் போல் காணப்படுவதால் குதிரைவாலி என அழைக்கப்படுகிறது. இதைப் 'புல்லுச் சாமை' என்றும் சொல்வார்கள்.

**மருத்துவ குணங்கள் :**

குதிரைவாலி தானியத்தில் சமைக்கப்படும் உணவு உடல் உறுப்புக்களைத் தூய்மைப்படுத்தும் நற்குணம் கொண்டது. இதில் நார்ச் சத்து, புரதச் சத்து, இரும்புச் சத்து, சுண்ணாம்புச் சத்து ஆகியவை நிறைய உள்ளன. குதிரைவாலி கார்போஹைட்ரேட் நிறைந்த நல்ல ஊட்டச்சத்து உணவாகும். கொடுமையை விடக் குதிரைவாலியில் ஆறு மடங்கு நார்ச்சத்து அதிகம் உள்ளது. அரிசி, கோதுமையைக் காட்டிலும் குறைவான கலோரிகளைக் கொண்டதாகும். சர்க்கரை நோயைக் கட்டுப்படுத்தும் தன்மை இதற்கு உண்டு. செரிமானம் மற்றும்



*ரத்தசோகை குறைபாடுகளைக் குணப்படுத்தக்கூடிய தன்மை கொண்டது குதிரைவாலி. உடலில் சேரும் அதிகப்படியான உப்புச் சத்தைக் கரைத்து சிறுநீரைப் பெருக்கிச் சீராக்கும் குணம் கொண்டது குதிரைவாலி. சர்க்கரை மற்றும் இதய நோயாளிகள் குதிரைவாலி உணவைத் தொடர்ந்து உட்கொண்டு வந்தால் உடலில் நோய் எதிர்ப்பு சக்தி அதிகரித்து ஆரோக்கியமாக வாழலாம்.*

***சாமை (Little Millet ):***

*வரலாறு : இதுவும் ஒரு புன்செய் நிலப் பயிராகும். சாமையில் புல்சாமை , பெருஞ்சாமை, சிறு சாமை, செஞ்சாமை, என்ற ரக வேற்றுமை இருப்பினும் இவற்றில் செஞ்சாமை வழக்கற்றுப் போய்விட்டது. பெருஞ்சாமையே இப்போது எஞ்சியுள்ளது எனக்கருதுகிறார் இயற்கை விஞ்ஞானி ஆர்.எஸ். நாராயணன்.*

***மருத்துவ குணங்கள் :***

*சாமை எல்லா வயதினருக்கும் ஏற்ற உணவு. விளைந்து நிற்கும் சாமைப் பயிரைப் பூப்பெய்திய பெண்களுக்கு உவமையாகக் கூறுவர். சாமையில் வைட்டமின் பி, இரும்புச்சத்து, புரதச்சத்து என ஏராளமான மருத்துவக் குணங்கள் உள்ளன. வயிற்றுப் புண்ணை ஆற்றும் சக்தியும், மலச்சிக்கல் வராமல் தடுக்கும் தன்மையும் கொண்டது சாமை. இனப்பெருக்க உறுப்புகளை வலுவாக்கி உயிர்ச் சத்தைத் தரக்கூடியது. உடல் எலும்புகளுக்கு இடையில் உள்ள தசை நார்களை வலிமையாக்கித் தெம்பைத் தரவல்லது.*

***கேழ்வரகு (Finger Millet):***

*வரலாறு : கேழ்வரகின் பூர்வீகம் ஆப்பிரிக்கா என்று சொல்லப்படுகிறது. இந்திய அளவில் ராகி உற்பத்தியில் தமிழகம் முதலிடத்தில் உள்ளது. வெப்ப மண்டலம்-மிதவெப்ப மண்டலப் பகுதிகளிலும் விளையக்கூடிய தன்மை கேழ்வரகுக்கு உண்டு. வண்டல் மண்ணில் சிறப்பாக வளரும் இப்பயிர் குறைந்த அளவு நீரில் விளையக்கூடியது. நாட்டுப்புறங்களில் 'கேப்பை' என்று வழங்கப்படும் இதற்கு ஆரியம், ராகி, குரக்கன் என்ற வேறு பெயர்களும் உள்ளன. கருப்பு, கருஞ்சிவப்பு, கருநீலம் என்ற நிறங்களில் கேழ்வரகு விளைவிக்கப்படுகிறது.*

***மருத்துவ குணங்கள் :***

*கேழ்வரகை ஏழைகளின் உணவு என்று கூறுவார்கள். கேழ்வரகில் உள்ள கால்சியச் சத்து மனித எலும்புகளை வலுப்படுத்தி உடலுக்கு நல்ல உறுதியைக் கொடுக்க வல்லது. கேழ்வரகு உடல் எடையைக் குறைக்கும் குணம் கொண்டது. குழந்தை பெற்ற தாய்மார்களின் பால்சுரப்பை அதிகப்படுத்தும் தன்மையும், ஆஸ்துமாவைக் கட்டுப்படுத்தும் தன்மையும் கேழ்வரகு உணவிற்கு உண்டு.*



கேழ்வரகின் மருத்துவ குணங்களை அறிந்து கர்நாடகாவின் தென் பகுதியில் வாழும் மக்கள் தங்கள் உணவில் கேழ்வரகுக் களியை அதிகம் சேர்த்துக்கொள்கின்றனர். ஆந்திராவில் பத்தியக் காலங்களில் கேழ்வரகோடு உளுந்தும் வெந்தயமும் சேர்த்து மேலும் மருத்துவக் குணமேற்றி தோசை வார்க்கின்றனர். பூப்பெய்திய பெண்களுக்கு கேழ்வரகு தோசை கண்டிப்பாகத் தரப்படுகிறது. கேழ்வரகில் பைட்டோ கெமிக்கல்கள் நிறைந்துள்ளதால், இதில் செய்யப்படும் உணவு நீரிழிவு நோயாளிகளுக்கு மிகவும் பயன் தரக்கூடியது.

***கம்பு (Pearl Millet):***

*வரலாறு : ஆப்பிரிக்க நாட்டுக் காடுகளில் விளைந்து கிடந்த இந்தத் தானியத்தை அங்கு வசித்த பழங்குடிகளே உலகுக்கு அறிமுகம் செய்தார்கள். மேலை நாட்டார் இதை முதலில் கால்நடைத் தீவனமாகவே பயன்படுத்தினர். பின்னர் இதன் மகத்துவம் உணரப்பட்டு, உலக அளவில் இன்று நாற்பதுக்கும் மேற்பட்ட நாடுகளில் கம்பு விளைவிக்கப்படுவதோடு உணவுப் பொருளாகவும் உள்ளது. அமெரிக்கா இந்தத் தானியத்திலிருந்து எரிபொருள் எடுக்கத் தொடங்கியுள்ளது. ஆசிய ஆபிரிக்க நாடுகளில் கம்பு கால்நடைகளுக்கும் மனிதர்களுக்கும் முக்கிய உணவாகத் திகழ்கிறது. இந்தியாவில் தமிழகத்தில் கம்பு அதிகமாகப் பயிரிடப்படுகிறது. இதனைத் தென்தமிழகக் கிராமப் பகுதிகளில் 'கம்மம்புல்' என்று அழைக்கின்றனர். தானியங்களிலே அதிக புரதச் சத்து நிறைந்தது கம்பு. சிறுதானியங்களில் கம்பு மட்டும் 'கெட்டித்தானியம்' என அழைக்கப்படுகிறது. இதில் நாட்டுக்கம்பு, ஒட்டுக்கம்பு என இரண்டு வகை உண்டு. வறண்ட பகுதிகளிலும், அதிகத் தட்பவெட்பச் சூழலிலும், குறைவான சத்துள்ள நிலங்களிலும் விளையக்கூடிய சக்தி கம்புக்கு உண்டு. தமிழகத்தில் பல்வேறு வகையான தானியங்கள் பயிரிடப்பட்டாலும் சிறு தானியங்களில் கம்புதான் அதிகமாகப் பயிரிடப்படுகிறது. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தமிழர்களின் உணவில் கம்பு இரண்டறக் கலந்திருக்கிறது.*

***மருத்துவ குணங்கள் :***

*கம்பைப் பயன்படுத்திக் களி, கூழ், தோசை, வடை என ஏகப்பட்ட உணவு வகைகள் தயாரிக்கலாம். தமிழகத்தின் கரிசல் பகுதிகளில் 'கம்மஞ் சோறு' உருண்டை மிகவும் பிரபலம். கம்பு கால்சியம், இரும்பு, நியாசின், புரதம், மாவு உள்ளிட்ட பல நுண்ணூட்டச் சத்து நிறைந்தது. வயிற்றுப் புண் மற்றும் குடல் புண்ணை ஆற்றும் குணம் கொண்டது. கம்பில் நிறைந்துள்ள எண்ணெய் இதயத்திற்கு நலம் பயக்கும். கம்பு உணவு மனித உடலில் சேர்ந்துள்ள கெட்ட கொழுப்பை நீக்கி நல்ல கொழுப்பைத் தக்க வைக்கும் திறன் கொண்டது. வெயிலில் நின்று வேலை செய்பவர்கள், எந்திரங்களில் வேலை செய்பவர்கள், இரவுப் பணி செய்பவர்கள், நீண்ட நேரம் ஒரே இடத்தில் அமர்ந்து வேலை செய்பவர்கள், அஜீரணக் கோளாறு மற்றும் மலச்சிக்கல் உள்ளவர்கள், குழந்தைகள், கர்ப்பிணிகள் கம்பு உணவைத் தங்கள் உணவில் கட்டாயம் சேர்த்துக்கொள்ள வேண்டும் என மருத்துவர்களும், உணவியல் நிபுணர்களும் அறிவுறுத்துகின்றனர். மன அழுத்தத்தைப் போக்கிப் புத்துணர்வு ஏற்படுத்தும் சக்தி கம்புக்கு இருப்பதாக அண்மைக்கால ஆய்வுகள் தெரிவிக்கின்றன. கண்பார்வை மற்றும் பாலியல் குறைபாடுகளுக்கும் இதில் மருந்து பொதிந்திருப்பதாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. கம்பு என்னும் சிறுதானியமும் அதில் தயாரிக்கப்படும் உணவும் நாம் பருகும் நீர் மற்றும் உண்ணும் உணவில் உள்ள உயிரினங்களுக்குத் தேவையற்ற உலோகக் கழிவுகளைத் தன்னுள் கிரகித்துக்கொள்ளும் தன்மை கொண்டது என்பது நிரூபிக்கப்பட்டுள்ளது. மின்னலைக் கட்டுப்படுத்தும் சக்தி கம்பு தானியத்திற்கு உள்ளதால் அதை நாம் முன்னோர்கள் கோவில் விமானக் கலசங்களில் பாதுகாத்து வந்துள்ளனர்.*

***சோளம் (White Millet):***

*வரலாறு : ஐரோப்பியர்கள் வழி இந்தியாவுக்கு வந்த சோளம் தமிழகத்தில் அதிகம் பயிரிடப்படுகிறது. இதில் வெள்ளைச் சோளம் (நாட்டுச் சோளம்), கருஞ்சோளம், செஞ்சோளம், நாத்துச் சோளம், மக்காச் சோளம், இரும்புச் சோளம் எனப் பல வகைகள் உண்டு. பல நிறங்கள் கொண்ட இவை வீரியமிக்கவையாகவும் குறுகியகாலப் பயிர்களாகவும் விளங்குகின்றன. மக்காச் சோளத்தின் பூர்வீகம் அமெரிக்கா என்று சொல்லப்படுகிறது. அமெரிக்கர்களின் அன்றாட உணவில் சோளம் முக்கியப் பங்கு வகிக்கிறது.*

***மருத்துவ குணங்கள் :***

*நாட்டுச் சோளம் சுவையும் ஊட்டச்சத்துக்களும் நிறைந்த தானியம். தமிழர்களின் உணவில் சோளம் இரண்டறக் கலந்துள்ளது. பொங்கல் திருநாளில் சோளம் மிகுதியாகப் பயன்படுத்தப்படுகிறது. தென் மாவட்டக் கிராமங்களில் 'சோளத்*

தோசை'யின் மணமும் ருசியும் அலாதியானது. ஆந்திராவில் சோள வடை பாரம்பரியப் பதார்த்தம் ஆகும். கம்மம், கரீம் நகர், கிருஷ்ணா மாவட்டப் பகுதிகளில் சோள வடை மிகவும் பிரபலம். கர்நாடகாவின் வட பகுதிகளில் சோளக் களியும், சோள ரொட்டியும் இன்னும் பல இடங்களில் இயல்பாகக் கிடைக்கின்றன. மராட்டிய மாநிலத்தில் சோளத்தில் செய்த ரொட்டி உணவு மக்களிடையே அதிகமாகப் பயன்படுத்தப்படுகிறது. சோளத்தைக் கொண்டு கூழ், ரொட்டி, வடை, களி, கஞ்சி செய்வதுண்டு. சோளத்தில் மனித உடலுக்குத் தேவையான மாவுச் சத்து, நார்ச் சத்து, கொழுப்பு, இரும்பு மற்றும் புரதச் சத்துக்கள் நிறைந்துள்ளன. சோளத்தில் செய்த உணவை சிறிதளவு உண்டாலே வயிறு நிறைந்துவிடும் தன்மை கொண்டது. நீரிழிவு நோய்க்கு மிகவும் நல்லது. சோளம், தயமின், ரிபோஃப்ளோவின், நியாசின் ஆகிய நுண் ஊட்டச்சத்து நிறைந்த தானியமாகும்.



**வரகு *(Kodo Millet)*:**

வரலாறு : வறண்ட பகுதிகளில் கூட விளையக்கூடிய தன்மை வரகிற்கு உண்டு. வரகு தானியத்தின் மேல்ப் பகுதி ஏழு அடுக்குகளைக் கொண்டிருப்பதாகக் கூறப்படுகிறது. இதன் விதைகள் ஆயிரம் வருடங்கள் விதைப்புத்திறன் கொண்டவை என வேளாண் விஞ்ஞானிகள் கண்டறிந்துள்ளனர். களர் நிலத்தில்கூட வரகைப் பயிரிடலாம். சிறுவரகு, பெருவரகு என இரண்டு வகையான வரகுப்பயிர்கள் விளைவிக்கப்படுகின்றன. பனிவரகு என்ற வகையும் உண்டு. பனிவரகின் தாவரவியல் பெயர் *'Panicum Miliaceum'* என்பதாகும். இதன்

*பூர்வீகம் வடக்குச் சீனா என்று தொல்லியல் ஆய்வுகள் குறிப்பிடுகின்றன. பனிவரகு காடைக்கண்ணி என்றும் வழங்கப்படுகிறது.*

***மருத்துவ குணங்கள் :***

*உலகின் பல நாடுகளில் வரகு பாரம்பரிய உணவாகப் பயன்பாட்டில் உள்ளது. இதில் நார்ச் சத்து, புரதச் சத்து, மாவுச் சத்து, வைட்டமின்-பி, கால்சியம் ஆகிய நுண்ணுட்டச் சத்துக்கள் அதிகம் நிறைந்துள்ளன. எளிதில் செரிமானமாகும் தன்மை வரகிற்கு உண்டு. வரகில் செய்த உணவு உடல் பருமனைக் குறைக்க வல்லது. கண்பார்வைக்கு மிகவும் நல்லது. பெண்களின் மாதவிடாய் பிரச்சினைகளைச் சரி செய்யும் தன்மை கொண்டது. 'வரகு' மின்னலைத் தாங்கும் அதீத ஆற்றலைப் பெற்றது என அறிவியல் உறுதிப்படுத்துகிறது. அதனால்த்தான், இடி மின்னல்களிலிருந்து கோவில்க் கோபுரங்களைப் பாதுகாக்க அதன் கலசங்களில் வரகைச் சேமித்து வைத்தனர் நம் முன்னோர்கள்.*

*மொத்தத்தில் சிறு தானிய உணவுகள் அறிவியல் பூர்வமானவை , சுற்றுச் சூழலுக்குக் கேடு விளைவிக்காதவை, ஊட்டச் சத்து மற்றும் மருத்துவக் குணங்களும் மிக்கவை.*

***பொருளாதார நோக்கில் சிறுதானியங்கள்***

*சிறு தானியப் பயிர்களுக்கு முக்கியத்துவம் கொடுத்து அதன் உற்பத்தியை அதிகரிக்கும் பட்சத்தில் நமது அந்நியச் செலாவணியை மிச்சப்படுத்துவதுடன் உள்ளூர் விலைவாசியையும் கட்டுக்குள் கொண்டுவர முடியும். மனித உணவுத் தேவையை கலோரி சக்தியை வைத்துக் கணக்கிடாமல், புரதம், நல்ல கொழுப்பு, தாதுப்பு, வைட்டமின் சத்துக்கள் நிறைந்த சாமை, தினை, குதிரைவாலி, காடைக்கண்ணி, வரகு போன்ற சிறு தானியங்களை வைத்துக் கணக்கிட வேண்டும் என்று வேளாண் விஞ்ஞானிகள் வற்புறுத்துகின்றனர். 'பாரம்பரியச் சிறுதானிய உணவுகளின் பயன் மற்றும் சாகுபடி குறித்து மத்திய மாநில அரசுகள் பொது மக்கள் மத்தியில் விழிப்புணர்வை ஏற்படுத்த வேண்டும்' என்று வேளாண் விஞ்ஞானி எம்.எஸ். சுவாமிநாதன் வலியுறுத்தியுள்ளார். மங்கோலியா, சீனா, ரஷ்யா மற்றும் தெற்காசியப் பிராந்தியங்களிலும் மக்கள் சிறுதானியங்களைப் பயிரிட்டும் பயன்படுத்தியும் வந்துள்ளனர்.*

***சிறு தானியங்களின் அறிவியல் பெயர்கள்***

*ஆங்கிலம் மற்றும் இந்திய மொழிகள் சிலவற்றில் சிறு தானியப் பெயர்கள் மற்றும் அவற்றின் அறிவியல் பெயர்களின் அட்டவணையைத் தகவலுக்காக இங்குத் தரப்பட்டுள்ளது.*

***அட்டவணை :***

| தமிழ்ப் பெயர் | ஆங்கிலப் பெயர் | அறிவியல் பெயர் | மலையாளம் | தெலுங்கு | கன்னடம் | இந்தி |
|---|---|---|---|---|---|---|
| தினை | /Italian Millet Foxtail Millet | Sataria italica | தினா | கோரா | நவீனி | கங்கினி/ ராலா |
| குதிரைவாலி | Barnyard millet | Echinochlao esculenta | கவடபுல்லு | உட்டாலு | ஓடாலு | ஜங்கோரா |
| சாமை | Little millet | Panicum millare | சாமா | சாமலு | சாமெ | குட்கி |
| கேழ்வரகு | Finger millet | Eleusine Coracana | பஞ்சி புல்லு முதிரை/ ராகி | ராகுலு | ராகி | நச்சனி/ முண்டா |
| கம்பு | Pearl millet Bulrush/ millet/Spiked millet | Pennicum Typhoides | கம்பம் | சஜ்ஜலு | சஜ்ஜி | பாஜ்ரா |
| சோளம் | White millet | sorghum | சோளம் | சொன்னலு | ஜோலா | ஜோவர் |
| வரகு | Kodo millet | Paspalum scrobicaulatum Panicum millare | கோவரகு | அறிகேலு | ஹரிக் கா | கோடென் /கொட்றா |

**முடிவுரை**

*சிறு தானியங்களின் மருத்துவ குணங்களை வெளிக்கொணரும் வகையில் சிறு தானிய உணவுத் திருவிழாக்கள், கண்காட்சிகள் நடத்துவதன் மூலம் சிறு தானியப் பயன்பாட்டை மக்களிடம் மீட்டுருவாக்கம் செய்ய முடியும். வலிமையான, ஆரோக்கியமான உடலுக்குப் பாரம்பரிய சிறு தானிய உணவுகளைப் பயன்படுத்த மக்கள் முன்வர வேண்டும். எதிர்கால இந்தியப் பொருளாதார வளர்ச்சிக்கும் சந்ததியினருக்கும் சிறு தானிய உற்பத்தியும், உணவும் மிகமிக அவசியம். 'உலக நன்செய் நில தினம்' என்று அறிவிக்கபட்டுள்ளது போல் உலகச் சிறுதானியங்கள் ஆண்டும் அறிவிக்கப்பட வேண்டும் என்ற கோரிக்கை நீண்ட காலமாக வலியுறுத்தப்பட்டு வந்தது. அடுத்த பத்தாண்டுகளில் ஏதாவது ஒரு ஆண்டை 'உலகச் சிறுதானியங்கள் ஆண்டு' என அறிவிக்க வேண்டும் என்று ஐக்கிய நாடுகள் சபைக்கு வேளாண் விஞ்ஞானி எம்.எஸ்.சுவாமிநாதன் வேண்டுகோள் விடுத்துள்ளதைத் தொடர்ந்து இந்தியாவின் கோரிக்கையை ஏற்று 2023-ஆம் ஆண்டை 'சர்வதேச சிறுதானியங்கள் ஆண்டாக' ஐக்கிய நாடுகள் பொதுச்சபை அறிவித்திருப்பது சிறுதானியங்களுக்குக் கிடைத்துள்ள ஆகச்சிறந்த அங்கீகாரமாகும்.*

***சான்றாதாரங்கள்***

***தமிழ்***


*1. ஆனந்தராசன்.ஜே. 2002. பவுத்தமும் பழந்தமிழ்க் குடிமக்களும், சென்னை: அன்றில் பதிப்பகம்.*

*2. இசக்கிராஜா. 2016. 'இனவரைவியல் நோக்கில் தமிழர் உணவுகளில் பசுவின் பங்களிப்பும் அரசியலும்', கீற்று, 13 அக்டோபர் 2016)*

*3. இராசமாணிக்கனார். மா. 1970. பத்துப்பாட்டு ஆராய்ச்சி, பதிப்புத்துறை, சென்னைப் பல்கலைக்கழகம்.*

*4. இராமசுப்பிரமணியன். சு. 2021. 'சங்கத் தமிழரின் உணவுக் கலாச்சாரம்', காக்கை சிறகினிலே, ஜனவரி, 2021: 5-11.*

*5. கீதா. வ. கீற்று, 29 அக்டோபர், 2013.*

*6. குணசேகரன். சௌ. 2021. ' உணவும் சாதியும்', காலச்சுவடு, ஆகஸ்ட், 2021*

*7. ---------------------------. 2021. 'உணவும் சாதியும்: சென்னை மாகாணத்தின் பங்களாப் பணியாளர்கள்', காக்கைச் சிறகினிலே, அக்டோபர், 2021; பக். 60-66.*

*8. சீனிவாசன். ப. & சீ. சுசீலாதேவி. 2007. மாமிச உணவின் மருத்துவப் பயன்கள், சென்னை : ராமையா பதிப்பகம்.*

*9. சோமலெ. 1981. தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும், புது தில்லி: நேஷனல் புக் டிரஸ்ட் இந்தியா.*

*10. திருமலை. ம. பெரும்பாணாற்றுப்படை காட்டும் பண்டைத் தமிழரின் உணவுப் பண்பாடு, தமிழna, அக்டோபர், 2022, பக்.4-11 & நவம்பர், 2022. பக். 1-9.*

*11. தினகரன்- வசந்தம், 3.12.2017*

*12. தினமணி நாளிதழ், தில்லிப் பதிப்பு, 3.1.2023*

*13. பரமசிவன். தொ. 2014. உரைகல், சென்னை: கலப்பை.*

*14. பிலவேந்திரன், ச. 2001. 'உணவுப் பண்பாடும் சமூகப் பொருண்மைகளும்', தமிழ்ச் சிந்தனை மரபு: நாட்டுப்புறவியல் ஆய்வுகள் நூலிலுள்ள கட்டுரை, பெங்களூர்: தன்னனானே பதிப்பகம்.*


***English:***


*a. Acharya.K.T. 1994. Indian Food: A Historical Companion, New Delhi: Oxford University Press.*

*b. (http://mathimaran.files.wordpress.com/2012)*

*c. Keetru.com*

*d. Vinavu.com*

# தொல்தமிழர் வணிகம்

# தமிழ்நாடு - உலகின் தங்கத் தொட்டி.



**-- திவ்யகுமாரி கண்ணம்மா**

*ஐயை உலகத் தமிழ் மகளிர் மன்றம்.*

*வணிகம் என்பது மனிதனின் தேவைகளையும் விருப்பங்களையும் நிறைவேற்றி இலாபம் தரும் ஒரு பொருளாதாரச் செயற்பாடு ஆகும்.*

*உலக வணிகமானது முக்கிய நான்கு வளர்ச்சிக் கட்டங்களின் கீழ் இன்று வளச்சியடைந்துள்ளது .*

*பண்டமாற்றுமுறை*

*நாணயம், மற்றும் பணப் பரிமாற்றம்*

*கைத்தொழில் புரட்சி*

*தகவல் தொழில்நுட்பப் புரட்சி.*

*தமிழக வணிகம் என்பது நேற்று இன்று தோன்றியது அல்ல. கற்காலம் தொட்டே கற்கோடரிகளை (அத்திரம்பாக்கம்-சென்னை) உலகின் மற்ற இடங்களுக்கு வணிகம் செய்த தொன்மையான மனித இனமும் அதற்கென்று ஒரு தனி குணமும் கொண்ட தீபகற்ப நாடு . முப்புறமும் கடலால் சூழப்பட்டதால் , கடல் பயணம் செய்ய அமைப்புகள் கொண்ட இடம்.*

*தென் கிழக்கு ஆசியாவுக்கும் மேற்காசியாவுக்கும் இடையில் மிக முக்கியமான இடத்தில் அமைந்துள்ளது தமிழ்நாடு.*

*3000 ஆண்டு தொன்மையான வர்த்தக வரலாற்றைக் கொண்டது தமிழ்நாடு.*

*தமிழ் நிலம் சேர சோழ பாண்டியர், பல்லவர் மட்டுமல்லாது பல குறுநில மன்னர்களாலும் பழங்குடிகளாலும் ஆளப்பட்டு பாதுகாக்கப்பட்டு வளர்க்கப்பட்ட நாடு.*

*'திருமால் குன்றத்தில் இருந்து தெற்குக் கடற்கரையான குமரிமுனை வரை, எனவும் குளிர்ந்த நீர் நிலைகளையும் , உயர்ந்த கோபுரங்களையும் உடைய மதுரையும் சிறப்பு மிக்க உறையூரும் பரபரப்பான காஞ்சியும் அலைகள் எழும்*

புகார் , ஆக நான்கு பெரும் நகரங்களை உடையது தமிழ்நாடு என தமிழ்க் காவியமான சிலப்பதிகாரம் கூறுகிறது.'

சிலப்பதிகாரமும் மணிமேகலையும் களப்பிரர்கள் ஆட்சி காலத்தில் உதித்த பொக்கிஷங்கள் ஆகும்.

களப்பிரர்கள் ஆட்சி காலத்தில் பௌத்தமும் ஜைன ( சமணம் ) சமயமும் தமிழ்நாட்டில் வளர்ச்சி பெற்று இருந்தன. பிற்காலக் களப்பிரர்கள் காவேரிப்பூம்பட்டிணத்தை ஆண்டதாகக் கருதப்படுகிறது. சமணர்கள் வணிகத்தைப் பெருக்கித் தமிழ் வளர்த்தவர்கள் என்பதில் எவ்வித ஐயமும் இல்லை.

மேலே குறிப்பிட்டுள்ள தலைநகரங்களைத் தவிர கிழக்குக் கடற்கரையில் இருந்த பல துறைமுகங்கள் சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன.

பாண்டிச்சேரிக்கு அருகில் உள்ள அரிக்கமேடு, ராமேஸ்வரத்திற்கு அருகில் உள்ள ஆலங்குளம் போன்றவை வெளிநாட்டவர் குறிப்பேடுகளில் அதிகமாக இடம் பெற்றவை.



மேற்குக் கரையில் உள்ள சேர நாட்டைச் சேர்ந்த முசிறிஸ் என்ற முசிறி

வடக்கில் டிண்டீஸ் என்ற தொண்டி துறைமுகம் இருந்தது.

மிக முக்கியமானதும் மிகத் தொன்மையானதுமாகக் கருதப்படுவது புகார் ,

'அழியாப் புகழுடைய புகார், கடவுளர்களால் காக்கப்படுவது; கப்பல்களில் வரும் குதிரைகளாலும் வண்டிகளில் வரும் மிளகுப் பொதிகளாலும்

வடபகுதியின் மலைகளில் கிடைக்கும் ரத்தினங்களாலும் பொன்னாலும் மேற்கு மலைகளில் இருந்து வரும் சந்தனத்தாலும் அகிலாலும் தென்கடலின் முத்துக்களாலும் கீழைக் கடலின் பவளங்களாலும் கங்கைச் சமவெளியின் கோதுமையாலும் காவேரிச் சமவெளியின் நெல் வயல்களாலும் இலங்கையிலிருந்து வந்த உணவுப் பொருட்களாலும் கடாரத்தின் பொன்னாலும் நிறைந்திருந்தது. புகாரின் அகலமான வீதிகளில் அரிய விலையுறைந்த பொருட்கள் நிறைந்திருந்தன லாயத்தில் கட்டப்பட்ட குதிரைகளைப் போல புகார் கடற்கரையில் படகுகள் கட்டப்பட்டிருந்தன எனப் பட்டினப்பாலையும் சிலப்பதிகாரமும் மணிமேகலையும் புகார் தலைநகர் பற்றிக் கூறுகின்றன.

தமிழகத்திலிருந்து சீனம் கிரேக்கம் ஜாவா சுமத்ரா கம்போடியா இலங்கை பர்மா மத்தியதிரைகடல் பகுதி எனப் பல்வேறு பகுதிகளுக்கு வணிகப் பொருட்கள் ஏற்றுமதி செய்யப்பட்டுள்ளன.

தமிழகம் பல நாட்டுப் பொருட்களை உலகிற்கு விநியோகிக்கும் மையமாகச் செயல்பட்டுள்ளது.



பண்டையத் தமிழ் நாட்டின் முக்கியப் பொருளாதாரச் செயல்பாடுகள் விவசாயம், நெசவு, முத்துக் குளித்தல், மீன்பிடித்தல் , உற்பத்தி மற்றும் கட்டுமானம். நெல் மிக முக்கியமான பயிர், உள்நாட்டு வர்த்தகத்திற்கான பரிமாற்ற ஊடகமாக நெல்லும் உப்பும் செயல்பட்டது.

மிளகு , தினை , கிராம்பு மற்றும் கரும்பு ஆகியவை பொதுவாகப் பயிரிடப்படும் மற்ற முக்கியப் பயிர்களாகும்.

மதுரை மற்றும் உறையூர் நெசவுத் தொழிலுக்கான முக்கிய மையங்களாக இருந்தன ; "கொற்கை" முத்து வணிகத்தின் மையமாக இருந்தது.

சேர சோழ பாண்டிய அரசுகள் சிற்றரசர்கள் தமிழகத்தை தனித்தனி நாடுகளாக ஆண்டிருந்தாலும் மத்தியத் தரைக் கடல் பகுதியில் இருந்து தென்கிழக்கு நாடுகள் வரையிலான கடல் வணிகத்தில் தமிழகம் ஒரு முக்கிய பங்கை வகித்தது. கடல் வணிகம் நீண்ட நாள் நீடித்து இருந்ததற்கான வலிமையான ஒன்றிய அரசு அவசியமில்லாமல் இருந்தது என்றும் கடுமையான வரிகள் கட்டுப்பாடுகள் தவிர அரசின் இதரக் குறுக்கீடுகள் இல்லாதவரை வர்த்தகம் செழித்து இருந்தது என்பதை நாம் அறிய முடிகிறது.

உள்நாட்டு மதப் பூசல்களும் போர்களும் ஒருபுறம் நடந்தாலும். வணிகம் ஒரு புறம் நிற்காமல் நடந்து கொண்டே இருந்தது.

வணிகர்கள் அரசின் குறுக்கீடு இல்லாமல் தன்னாட்சி முறையில் செயல்பட்டு வந்தமையால் பல சங்கங்களையும் உருவாக்கி வணிகம் வளர்த்தனர்.

அரசு , வணிகர்களின் நல்லிணக்கத்தோடு விசாலமான துறைமுகங்களையும் நீண்ட சாலைகளையும், வணிகத்திற்குத் தேவையான மற்ற வசதிகளையும் செய்து வணிகர்களை ஊக்குவித்தது.

தமிழகத்தில் வணிகர்கள் ஒரு குழுவாகவோ அல்லது ஒரு இனத்தைச் சேர்ந்தவராகவோ இல்லை. தங்கள் பொருட்களைத் தாமே தயாரித்துக் கொள்ளும் சிறு வியாபாரிகளில் இருந்து சீரும் அலை கடலில் பயணித்துப் பொருட்களை மற்ற நாடுகளுக்குச் சேர்க்கும் கடல் வணிகர்கள் வரையில் பல பிரிவுகளைச் சேர்ந்த வணிகர்கள் இருந்தார்கள்.

உள்நாட்டுச் சந்தைகளிலும் கடல் கடந்து இருக்கும் மற்ற நாடுகளில் இருக்கும் சந்தைகளையும் இந்த வணிகர்கள் இணைத்திருந்தார்கள். பல அயல்நாட்டு வணிகர்களும் தமிழ்நாட்டின் கடலோரப் பகுதிகளிலும் துறைமுகங்களுக்கு அருகிலும் நிரந்தரமாக குடியமர்ந்து வணிகம் செய்தார்கள் . தமிழ் வணிகர்களும் வணிகத்திற்காக அயல்நாட்டுக்கு குடிபெயர்ந்தார்கள். திருமணமும் செய்துக்கொண்டாகள். அயல் நாட்டு வணிகர்களும் தமிழர்களைத் திருமணம் செய்து கொண்டார்கள்.

வணிகர்கள் பல மொழிகள் தெரிந்தவர்களாக விளங்கினர். அத்தியாவசியப் பொருட்கள் முதல் ஆடம்பரப் பொருட்கள் வரை வர்த்தகம் செய்யப்பட்டது. அயல் நாடுகளுக்கு வாணிகஞ் செய்யச் சென்றவர் ஒன்று சேர்ந்து கூட்டமாகச் சென்றார்கள். வணிகக் கூட்டத்துக்கு வணிகச்சாத்து என்பது பெயர்.

*ஏற்றுமதிப் பொருள்கள் ஏறுசாத்து என்றும், இறக்குமதிப் பொருள்கள் இறங்குசாத்து என்றும் அழைக்கப்பட்டன.*

*இவர்கள் பருவக் காற்றைப் பயன்படுத்தி, கிரேக்கம், ஜாவா, சுமத்ரா, கம்போடியா, கடாரம், இலங்கை, பர்மா, மத்தியதிரைகடல் பகுதி மற்றும் உலகின் பல தீவுகளுக்கும் வணிகம் மேற்கொண்டனர்.*

*தமிழகத்திற்கும் எகிப்துக்கும் இடையே வணிகக் கப்பல்களுக்கான நேரடிப் பாதையைக் கண்டுபிடித்த பிறகு வர்த்தகம் உச்சத்தை எட்டியது .*

*சுருக்கமாகக் கூறுவதென்றால் உப்பு, மிளகு, அரிய முத்து, மணிக் கற்கள், தந்தம், ஆமை ஓடு, துணி வகைகள், வாசனை திரவியங்கள் மற்றும் தங்க ஆபரணங்கள் தமிழகத்திலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டன, மசுலின் எனப்படும் மென்துகில் வகைகளையும், பாம்புச் சட்டையைப் போன்ற மிகமெல்லிய பருத்தித் துணியும் , கலைவண்ணம் மிளிரும் பட்டு நெய்யப்பட்ட துணிகளையும் வணிகம் செய்துள்ளனர். உறையூர் பருத்தி வணிகத்துக்குப் புகழ் பெற்றது. ஒருபுறம் கிரேக்கப் பழங்குடிகளுடனும், எகிப்தை ஆண்டுவந்த கிரேக்க இன மக்களுடனும், இன்னொருபுறம் மலாயத் தீவுக் கூட்டங்களுடனும், அங்கிருந்து சீனாவுடனும் தமிழர்கள் வணிகம் செய்து வந்தனர்.*

*இந்த வணிகத்தின் விளைவாக நெல், இஞ்சி, இலவங்கப்பட்டை, மற்றும் இதர பலபொருள்களின் தமிழ்ப் பெயர்கள் கிரேக்க மொழியில் இடம்பெற்றன.*

*ஆரம்பகால உரோமணிய வர்த்தகத்தில் , ஆடம்பரப் பொருட்களுக்கு, குறிப்பாக பெரில்லுக்கு அதிக தேவை இருந்தது. பெரில் என்பது இரத்தினக்கல். "*

*பச்சை மரகதம்,*

*சிகப்பு மரகதம் மற்றும்*

*நீல மரகதம் ".*

*கடல் வழிப் பயணம் செய்வோரை நீல (அக்வா மரைன்) மரகதம் பாதுகாக்கும் எனவும் நோய்களிலிருந்தும் பாதுகாக்கும் எனவும் யவனர்கள் நம்பினர்.*

*சீனர்கள் முத்திரைகள் செய்ய மரகதங்களைப் பயன்படுத்தியதாகவும் அவற்றை தமிழகத்திலிருந்து பெற்றதாகவும் குறிப்புகள் உள்ளன. உரோமானிய எழுத்தாளர்கள் தங்கள் கட்டுரைகளில் குறிப்பிடும் பொருட்கள் பெரும்பாலானவை தமிழகத்திலிருந்து வந்தவையே.*

*தமிழகத்தின் துறைமுகங்களிலும் உள்நாட்டுப் பகுதிகளிலும் தொல்பொருள் ஆராய்ச்சி மூலம் கிடைத்த உரோமானிய நாணயங்களும் மற்ற பொருட்களும்;*

*மத்தியதரைகடல் பகுதிகளுக்கும் தமிழகத்துக்கும் நடந்த வர்த்தகத்தைப் பற்றி இருபெரும் காப்பியங்களான சிலப்பதிகாரம் மற்றும் மணிமேகலையிலும் கூறப்பட்டுள்ள துறைமுகங்கள், நகரங்கள் , வர்த்தகங்கள், வணிகர்கள் போன்றவை மிகைப்படுத்தப்பட்ட வர்ணனை அல்ல. அந்நாட்களில் நடைமுறையில் இருந்தவை என்பதை உறுதி செய்பவையாக இருக்கின்றன . ரோம் மற்றும் அலெக்சாண்டரியாவைச் சேர்ந்த புவியியலாளர்கள் தாலமி , ப்ளினி, ஆகியோரின் குறிப்புகளும் பொ. யு 75 ல் எழுதப்பட்ட "பெரிப்ளஸ் ஆஃப் எரித்திரியன் ஸீ" என்ற குறிப்பேடுகளிலும் உள்ள தகவல்கள் இதற்கு வலு சேர்க்கின்றன.*



*சங்கக் காலம் தொட்டே யவனவர்களுக்கும் ( உரோமர்கள், கிரேக்கர்கள் ) தமிழர்களுக்கும் வணிகத் தொடர்பு இருந்துள்ளது.*

*தமிழக தொல்பொருளாய்வு முடிவுகளில் இருந்து கிரேக்கத்துக்கே அதிகமான பொருட்கள் ஏற்றுமதி இறக்குமதி செய்யப்பட்டுள்ளது என்பது உறுதியாகிறது.*

*சங்க இலக்கியச் சான்றுகளாக,*

*" யவனர் தந்த வினைமாண் நன்கலம் பொன்னொடு வந்து கறியொடு பெயரும்'' (அகநானூறு 149)*

*''யவனர் நன்கலம் தந்த தண்கமழ் தேறல்'' (புறநானூறு 56)*
*"யவனர் ஓதிம விளக்கு'' (பெரும் பாணாற்றுப்படை 315)*
*''யவனர் இயற்றிய வினைமாண் பாவை'' (நெடுநல்வாடை 101)*
*''வலிபுணர் யாக்கை வன்கண் யவனர்'' (முல்லைப்பாட்டு 61)*

ஆகிய பாடல்கள் யவனவர்களோடு இருந்த வணிகத் தொடர்பை உறுதிப்படுத்துகின்றன.

யவனர்களுக்குத் தமிழ்நாட்டின் நுகர்வுப் பொருட்களில் ' மிளகு' மீது தீராத காதல் நெடுங்காலம் தொட்டே இருந்தது. இந்தப் பொருட்களுக்குப் பொன் பண்டமாற்றம் செய்யப்பட்டது. யவனர்களின் படகுகள் பொன்னோடு வந்து மிளகுப் பொதிகளொடு சென்றதாக அகநானூறு கூறுகிறது.

" சாத்தெறிந்து அதர்கூட் டுண்ணும் அணங்குடைப் பகழிக்கொடுவில் ஆடவர்.'

பலாப்பழம் அளவாகக் கட்டின மிரியல் (மிளகு) மூட்டைகள் கழுதைகளின் முதுகின் மேல் ஏற்றிக்கொண்டு வாணிகச் சாத்தர் தங்களுடைய வில் வீரர்களோடு சென்றனர். ஆங்காங்கே வழியில் இருந்த சுங்கச் சாவடிகளில் அரசனுடைய அலுவலர்கள் அவர்களிடமிருந்து சுங்கம் வாங்கினார்கள். என கடியலூர் உருத்திரக்கண்ணனார் கூறுகிறார்.

அளவுக்கு அதிகமாக மிளகு மீதும் ஆடம்பரப் பொருட்கள் மீதும் மோகம் கொண்டு விட்டதால் உரோமானிய சாம்ராஜ்யம் தங்கம் வெள்ளி ஆகியவற்றை இழந்து நின்றது . யவனர்கள் தென்னிந்தியாவுடனான வர்த்தகத்தினால் அவர்களுடைய தங்கம் வெள்ளி இருப்பு முற்றிலுமாக சுரண்டப்படுவதாக புகார் தெரிவிக்கின்றனர் . தாங்கள் தென்னமெரிக்காவிலிருந்து போரிட்டு வென்ற வெள்ளியெல்லாம் இந்தியாவிடம் இழந்து நிற்பதாகப் போர்ச்சுகீசியர்கள் 16ஆம் நூற்றாண்டில் எதிர்ப்பு தெரிவித்திருக்கிறார்கள் என சர்வதேச வர்த்தகத்தின் முன்னோடிகள் புத்தகத்தில் "கனகலதா முகுந்த்" கூறுகிறார். அயல் நாட்டினர் தென்னிந்திய மசாலாப் பொருட்கள் மீதும், ஆடம்பரப் பொருட்கள் மீதும், காட்டிய மோகத்தை இந்தியர்கள் அவர்களின் பொருட்கள் மேல் காட்டவில்லை மாறாக தென்னிந்தியர்களின் எதிர்பார்ப்பாக இருந்தது தங்கமும் வெள்ளியுமே.

இதனால்

பொ.யு. 77 இல் பிளினி, " நேச்சுரலிஸ் ஹிஸ்டோரியா" எனும் தனது நூலில் தென்னிந்தியாவை ( தக்காண பீட பூமிக்கு கிழக்கிலும் மேற்கிலும் உள்ள கடலோரங்கள் ) அறிய உலோகங்களின் ( தங்கம் , வெள்ளி) தொட்டி எனக் குறிப்பிட்டிருக்கிறார். உலகில் தங்கம் எங்குச் சுற்றினாலும் அது இறுதியாகத் தென் இந்தியாவை வந்து அடையும் என்று அக்கால வணிகர்களுக்கும் அரசர்களுக்கும் தெரிந்திருந்தது.

தொடரும்.

# சட்டக் கலைச் சொல்லாக்கம்

# மொழி வளர்ச்சியும் கலைச் சொல்லாக்கமும்.

***(முனைவர் செ. இராஜேஸ்வரி மொழிபெயர்ப்பியல் நுண் ஆய்விருக்கையின் மெய் நிகர் உரை)***



**பேரா. மு. முத்துவேலு,**
*தமிழ் பேராசிரியர் மாநிலக்கல்லூரி.*
*உறுப்பினர், மாநிலச் சட்ட ஆட்சிமொழி ஆணையம்,*
*சென்னை.*

*மொழியின் பயன்பாடு பெருகப் பெருக அதன் சொல்வளமும் பெருகிவரும். அப்போது ஒவ்வொரு துறையிலும் பயன்படும் மொழியின் தனிக்கூறுகளாக அந்தந்தத் துறைக்கென்று தனிப்பொருளை உணர்த்தும் சொற்கள் தோன்றுகின்றன. இவ்வாறு துறைசார் கருத்துகளை நுட்பமாக உணர்த்தும் சொற்கள் கலைச்சொற்கள் எனப்படுகின்றன.*

***மொழிவளர்ச்சியும் சமுதாயமும்:***

*மொழி வளர்ச்சி என்பது சமுதாய வளர்ச்சியை ஒட்டி அமைகிறது.*

*''சமுதாய வளர்ச்சியின் காரணமாக ஒரு சமுதாயத்தில் புதிய எண்ணங்களும், கோட்பாடுகளும் கருவிகளும் தோன்றுவது உண்டு. அவை சமுதாயத்தின் அக மாற்றங்களால் தோன்றியிருக்கலாம் அல்லது புறத் தாக்குதலால் அறிமுகமாயிருக்கலாம். புதிய எண்ணங்களையும் கோட்பாடுகளையும் குறிக்கப் புதிய சொற்கள் தேவைப்படுகின்றன'' என்பர்.*

*சமுதாயத்தில் தோன்றும் அகமாற்றங்கள் அந்தச் சமுதாய மக்களின் சிந்தனையை வளர்க்கின்றன. அறிவியல் புனைவுகளும் இலக்கியப் படைப்புகளும் அச்சிந்தனையின் வளர்ச்சியைப் புலப்படுத்துகின்றன. ''இதன் விளைவாக உருவாகும் புதிய கருவிகளையும் கருத்துகளையும் பெயரிட்டழைக்கப் புதிய சொற்கள் தேவைப்படுகின்றன''. சமுதாய அகமாற்றத்தின் காரணமாக அச் சமுதாய மக்களால் கண்டுபிடிக்கப்படும் அறிவியல் கருவிகளுக்கும், படைக்கப்படும் இலக்கியங்களுக்கும் சொற்களை அம்மொழியில் இருந்தே அமைத்துக் கொள்வது இயல்பான ஒன்று.*

***தமிழும் கலைச்சொற்களும்:***

*வரலாற்றுக் காரணங்களினால் ஒரு சமுதாயம் மற்றொன்றின் மீது ஏற்படுத்தும் கருத்துத் தாக்கத்தைப் புறத்தாக்குதல் எனக் குறிப்பிடலாம். இத்தகு புறத் தாக்குதலினாலும் புதிய கருவிகளும் கருத்துகளும் தோன்றுவதுண்டு.*

*தமிழ் மக்களோடு வடமொழியாளர்கள் வந்து கலந்த போது வடமொழிக் கருத்துகளின் தாக்கம் தமிழர்களின் வாழ்விலும் மொழியிலும் பதிந்தது. அது தமிழர் தம் இலக்கியத்திலும் பதிவாகி நின்றது. வட மொழியாளர்களின் கருத்துகளைத் தமிழில் இறக்கிக் கொள்வதற்கு அம்மொழிச் சொற்களும் தேவைப்பட்டன. எனவே வடமொழிச் சொற்களைத் தமிழில் ஏற்றுக்கொள்ள வேண்டிய முறை குறித்தும் இலக்கணம் வகுக்கப்பட்டது. இதனைத் தொல்காப்பியம் பின்வரும் நூற்பாவில் விளக்குகின்றது.*

*வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ*
*எழுத்தொடு புணர்ந்த சொல்லாகும்மே*

*நாகரிகமும் பண்பாடுமுடைய சமுதாயத்திற்குத் தேவையான அனைத்துத் துறைகளையும் தமிழர்கள் பெற்றிருந்தனர். எனினும், தமிழ்நில ஆட்சியாளர்கள் காலந்தோறும் எந்த மொழிக்கு ஆக்கம் தந்தார்களோ அந்த மொழிச் சொற்களும் கருத்துகளும் தமிழ் மொழியில் வந்து புகுந்தன. ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் இருந்த ஆங்கில மொழிச் சட்டம், நிருவாகம், நீதித்துறை என அனைத்துத் துறைகளிலும் ஆதிக்கம் செலுத்தியது.*

*விடுதலைக்குப் பின்னும் ஆங்கிலச் சட்டங்களே இருந்து வருகின்றன. இப்போது ஆங்கிலச் சட்டக் கருத்துகளைத் தமிழில் வழங்கிக் கொள்ளவேண்டியது காலத்தின் கட்டாயமாயிற்று. ஆங்கிலச் சட்டக் கருத்துகளைத் தமிழாக்கம் செய்வதற்கு அச் சட்டக் கருத்துக்களைச் சுமந்து நிற்கும் கலைச் சொற்களைத் தமிழாக்கம் செய்வது அடிப்படைப் பணியாக அமைகின்றது.*

***சட்டத் தமிழாக்கத்தில் கலைச்சொற்கள் பெறும் இடம்:***

*சட்டத் தமிழில் அடிப்படை அலகுகளாக இருப்பவை கலைச் சொற்கள். ''செங்கல்லால் வீடு கட்டுவது போல், சொல்லை வைத்து வாக்கியங்களைக் கட்டுகிறோம்'' என்பார் நீதிபதி சு. மகராசன். இது கலைச் சொற்களைத் தமிழாக்கம் செய்தலே சட்டத் தமிழாக்கத்தில் முதன்மையான பணியாகும்.*

***சாதாரணச் சொற்களும் கலைச் சொற்களும்:***

*ஒவ்வொரு துறையிலும் வழங்கி வரும் கலைச் சொற்கள் அந்தந்த துறைசார் கருத்துப் படிவங்களைக் குறிக்கும் அடையாளங்களாகத் திகழ்கின்றன. இதனால் அவை தனித்தன்மையுடன் விளங்குகின்றன.*

*கலைச் சொற்கள் வழக்கிலுள்ள சொற்களில் இருந்தும் உருவாக்கப்படுகின்றன. ‘‘சாதாரண வழக்கிலுள்ள சொற்களும் பொருள் வரையறுக்கப்பட்டுக் கலைச் சொற்களாகின்றன. வழக்கில் அவை சொற்கள் (Words) அறிவியலில் அவை கலைச் சொற்கள் (Terms). ஆற்றல், மோதல் போன்றவை வழக்கில் சொற்கள்; இயற்பியலில் கலைச் சொற்கள்’’ என்று சாதாரண சொற்களுக்கும் கலைச் சொற்களுக்கும் உள்ள வேறுபாடு விளக்கப் பெறுகின்றது.*



*‘‘வழக்கறிஞர்களின் சட்ட நூல்களையும் விளக்கங்களையும் படித்தால், அவர்களின் மொழியில் சிறப்புக் கூறுகள் சில காணலாம். அவர்கள் நீதிமன்றங்களில் வழக்காடும் போது பேச்சில் அவற்றை மிகுதியாகக் கேட்கலாம். எல்லோரும் பேசும் பொது மொழி அவர்களின் எழுத்திலும் பேச்சிலும் உண்டு. அந்தப் பொது மொழியோடு, இத்தகைய சிறப்புக் கூறுகளும் கலப்பதால், அவர்களின் மொழி வேறுபட்டு நிற்கின்றது’’ என்பார் மு. வரதராசனார். இவ்வேறுபாட்டிற்குக் காரணம் அவர் ‘சிறப்புக் கூறுகள்’ என்று குறிப்பிடும் கலைச் சொற்கள் தனிப் பொருட் சிறப்புடன் கையாளப்படுவதாகும். ஒரு சொல் நேரடிப் பொருளில் வழங்குதல் ஒரு நிலை, அது பொது மக்கள் வழக்கு. அதே சொல் வேறுதளத்தில் வேறொரு பொருளில் வழங்குதல்*

*தனிக்குழு வழக்கு. சட்டக் கலைச் சொற்கள் தனிக்குழு வழக்கைச் சார்ந்தவை எனலாம். பேச்சு வழக்கிலும் எழுத்து வடிவிலும் இருக்கும் ஒரு சொல் குறிப்பிடதொரு துறையில் கலைச் சொல்லாகப் பயன்படும்போது வரையறுக்கப்பட்டதொரு தனிப் பொருளை உணர்த்துகின்றது.*

*கலைச்சொல் ஒவ்வொன்றிற்கும் இந்தத் தனிப்பொருளை உணர்த்தும் தன்மை உண்டு. ஆங்கிலத்தில் 'Interest' என்னும் சொல்லுக்கு 'வட்டி', 'அக்கறை' என்னும் பொருள்கள் இருந்தாலும் சட்டத்தில் பயன்படுத்தப்படும்போது அது 'நலன்' என்னும் பொருளைக் குறிக்கின்றது. இதைப் போலவே 'Right' என்னும் ஆங்கிலச் சொல் 'நியாயம்', 'நேர்மை' 'வலம்', 'பொருத்தம்' என்னும் பல பொருள்களைக் குறித்தாலும், அது சட்டத்தில் கலைச் சொல்லாக வரும்போது 'உரிமை' என்னும் பொருளை உணர்த்துகிறது.*

*தமிழிலும் 'முறை' என்னும் சொல் 'உறவுமுறை', 'எத்தனை முறை', 'முறைப்படி' என்று வருமிடங்களில் 'உறவுநிலை, 'எண்ணிக்கை', 'சரியான' வெவ்வேறு பொருளை உணர்த்துகின்றது. அது சட்டத்தில் கலைச்சொல்லாகப் பயன்படும்போது 'முறை செய்தல்' (Administration of Justice) என்னும் சட்டப்பொருளைக் குறிக்கின்றது.*

***சட்டக் கலைச் சொல்லாக்க முயற்சிகள்:***

*சென்னை, புனித ஜார்ஜ் கோட்டையின் அரசிதழில் 1921 ஆம் ஆண்டு முதலே இந்திய அசின் சட்டமுன் வடிவுகளும், சட்டங்களும் தமிழில் வெளியிடப்பட்டிருப்பதைக் காணமுடிகிறது. இம் மொழிபெயர்ப்புகளில் காணப்படும் சட்டக் கலைச்சொற்களைச் சட்டக் கலைச்சொல்லாக்க முயற்சியின் தொடக்கநிலை ஆகும். இதற்கு,* A Bill further to amend the code of Civil Procedure, 1908 *என்னும் ஆங்கிலத் தொடர்.*

*"1908-ஆம் ஆண்டு ஸிவில் ப்ரரொஸிஜர் கோட் என்னும் சிவில் விவகார விசாரணைச் சட்டத்தைப் பின்னும் திருத்துவதற்கான மசோதா ஆக்ட்" என்று தமிழில் அமைக்கப்பட்டுள்ளதைக் கூறலாம்.*

***முதல் சட்ட நூல்:***

*நீதிமன்றத் தீர்ப்புகளைத் தமிழாக்கம் செய்யும் பணியும் 1861 இல் தொடங்கிவிட்டது. தமிழில் முதல் நாவலை எழுதிய மாயூரம் வேதநாயகம் பிள்ளையே முதல் சட்ட நூலையும் வழங்கியுள்ளார். இவர் ஆங்கில அரசின் கீழ் 'முன்சீப்' நீதிமன்ற நடுவராகப் பணியாற்றியவர். இவர் 1805 முதல் 1861 வரையிலான கால அளவில் வெளியான 'சதார்' நீதிமன்றத் தீர்ப்புகளைத் தமிழில்*

*மொழி பெயர்த்துத் தொகுத்துச் "சித்தாந்த சங்கிரகம்" என்ற பெயரில் வெளியிட்டார்.*

***சித்தாந்த சங்கிரகத்தின் மொழிநடை:***

*சித்தாந்த சங்கிரகம் பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தமிழ் உரை நடையில் அமைந்துள்ளது. அக்காலத்தில் தமிழ்ப்பற்று மிகுந்தவர்களும் தங்கள் உரைநடையில் வடசொற்களைக் கலந்து எழுதிவந்த நிலை இருந்தது. இதற்குச் சித்தாந்த சங்கிரகமும் எடுத்துக்காட்டாக உள்ளது. அந்நூலின் பகுதி பின்வருமாறு:*

*"ஆதியில் ஒரு செய்கையாவது எந்த நிமித்தியத்தினால் செய்யப்பட்டதோ அந்த நிமித்தியத்துக்குப் பிரத்தியட்ச விரோதமான வேறொரு நிமித்தியத்தை அச்செய்கைக்கு ஆதாரமாகப் பேசக் கூடாது".*

கலைச்சொற்களை அறிந்துகொள்வோம்

| | | |
|---|---|---|
| International Law | – | அனைத்து நாட்டுச் சட்டம் |
| Constitutional Law | – | அரசியல் அமைப்புச் சட்டம் |
| Supreme court | – | உச்சநீதி மன்றம் |
| High Courts | – | உயர்நீதி மன்றங்கள் |
| Writs | – | சட்ட ஆவணங்கள் |
| Substantive Laws | – | உரிமைச் சட்டங்கள் |
| Procedureal Laws | – | செயற்பாட்டு முறைச்சட்டங்கள் |
| Indian penal code | – | இந்தியத் தண்டனைச் சட்டத் தொகுப்பு |
| Criminal Procedure code | – | குற்றவியல் செயற்பாட்டுமுறைத் தொகுப்பு |
| Civil Procedure code | – | உரிமையியல் செயற்பாட்டுமுறைத் தொகுப்பு |
| Indian Evidence Act | – | இந்தியச் சான்றுச் சட்டம் |
| Transfer of Property Act | – | சொத்துமாற்றுச் சட்டம் |
| Indian Succesion Act | – | இந்திய வாரிசுரிமைச் சட்டம் |
| Court fee stamp | – | நீதிமன்றக் கட்டண வில்லை |

***கலைச்சொற்களும் அகராதிகளும்:***

*தமிழில் முறையான கலைச் சொல்லாக்கப் பணி இருபதாம் நூற்றாண்டில்தான் தொடங்கியது. இராஜாஜியும் வேங்கட சுப்பையரும் சேர்ந்து சேலத்தில் 1916 இல் தமிழக சாஸ்திர பரிபாஷைச் சங்கத்தாரின் பத்திரிகை என்ற பத்திரிகையைத் தோற்றுவித்துக் கலைச்சொல்லாக்கப் பணியில் புதிய முயற்சியைத் தொடங்கிய பின்னரே சட்டத்திற்கென்று '1929 இல் சட்டச் சொல்*

*அகராதி ஒன்று சென்னை அரசாங்கத்தாரால் வெளியிடப் பெற்றது" என்பர். இதனைச் சட்டக் கலைச் சொல்லாக்கத்தின் முதல் முயற்சியாகக் கருதலாம்.*

***சட்டக் கலைச்சொற்களின் தனித்தன்மை:***

*"ஒரு கலைச்சொல்லின் (term) பொருளை வரம்பிட மிகத் தெளிவான கடுமையான எல்லைக் கோடுகள் வகுக்கப்படுகின்றன. ஒரு கருத்துப் படிவத்திற்கு ஒரு கலைச்சொல் என்று வடிவம் பொருள் வரம்பிடுகிறது. நீண்ட தொடர்கள், சிக்கல் நிறைந்த உரை இவற்றைக் கூட ஓர் அறிவியல் கலைச்சொல் உணர்த்திவிட முடியும் வரைவிலக்கணத்தில் (definition) அதன் பொருள் நிலைப்படுத்தப்படுகிறது. அது அந்தப் பொருளிலேயே (அத்துறையில்) மிகுந்த கட்டுப்பாட்டுடன் கையாளப்படுகிறது என்பார் "புளும் பீல்ட்".*

***ஆட்சித் தமிழ் சொல்லாக்கங்கள்:***

*கீ. இராமலிங்கனார் ஆட்சிமொழித் துறையில் கலைச் சொற்களை உருவாக்குவதற்கு ஐந்து வழிகளை வகுத்தளித்துள்ளார். அவை, ஐந்தும் உருவாக்கப்படும் கலைச்சொல்லின் தன்மை எவ்வாறு அமையவேண்டும் என்பதைக் காட்டுவன. அவை கலைச் சொல்லை உருவாக்குவதற்கான மொழியியல் கூறுகளைத் தெரிவிக்கவில்லை.*

*இ. மறைமலை, ஆட்சித் தமிழில் சொல்லாக்கங்கள் பெருக வழிமுறைகளை ஆய்ந்து வகுத்துள்ளார். அவற்றுள்;*

*1) சொற்களுடன் முன்னொட்டுப் பின்னொட்டுகளைச் சேர்த்தல்*

*2) இரண்டு சொற்களை இணைத்துப் புதுச் சொல்லை உண்டாக்குதல்*

*3) தொகைச் சொற்களை உருவாக்குதல்"*

***சட்டத் தமிழில் சலைச் சொல்லாக்க விதிகள்:***

*சட்டத் தமிழில் கலைச் சொல்லாக்கத்தில் 1968இல் தமிழக அரசு வெளியிட்ட சட்டச் சொல் அகராதியில் தொகுக்கப்பட்ட சொற்களில் கடைப்பிடிக்கப்பட்டுள்ள முறைகளுள் சில ஆராயப் பெறுகின்றன;*

***1) வினைச் சொல்லோடு விகுதிசேர்த்தல்:***

*தமிழில் வினைச் சொற்களுடன் விகுதிகளைச் சேர்த்துப் புதிய சொற்கள் உருவாக்கப்பட்டு வருகின்றன. "பொதுவாகத் தமிழில் புதிய சொற்கள் அமைப்பதற்கு, வினைச் சொல்லை அடிப்படைச் சொல்லாகப் பயன்படுத்துவது நல்லது" என்று வா. செ. குழந்தைசாமியும் இக்கருத்தினை வலியுறுத்துகின்றார்.*

எனவே வினைச் சொல்லை அடிப்படையாக வைத்துச் சட்டக் கலைச் சொற்கள் உருவாக்கப்பட்டுள்ளன.

***(அ) வினைச் சொல்லோடு 'பு' பின்னொட்டுச் சேர்த்தல்:***

| | | | | |
|---|---|---|---|---|
| *Accumulation* | - | குவி | - | குவிப்பு |
| *Refusal* | - | மறு | - | மறுப்பு |

***(ஆ) பின்னொட்டு 'வு' சேர்த்தல்:***

| | | | | |
|---|---|---|---|---|
| *Accretions* | - | சேர் | - | சேர்வு (நிலச் சேர்வு) |
| *Accrual or right* அடை | - | அடை(வு) | - | (உரிமை அடைவு) |
| *Offer* | - | முனை | - | முனைவு |
| *Consent* | - | இசை | - | இசைவு |

***2) ஏவல் வினையின் விகுதியை நீட்டித்தல்:***

| | | | | |
|---|---|---|---|---|
| *Compensation* | - | சரியிடு | - | சரியீடு |
| *Agreement* | - | உடன்படு | - | உடன் பாடு |

***3) பெயர்ச்சொல்லுடன் 'அகம்' சேர்த்தல்:***

| | | |
|---|---|---|
| *Corpus* | - | தூதரகம் (தூதர் + அகம்) |
| *Domicile* | - | நிலையகம் (நிலை + அகம்) |

***4) பெயர்ச் சொல்லோடு முன்னொட்டுச் சேர்த்தல்:***

| | | |
|---|---|---|
| *Document* | - | ஆவணம் |
| *Deed* | - | ஒப்பாவணம் |
| *Instrument* | - | முறையாவணம் |

***5) இரண்டு பெயர்ச் சொற்களை இணைத்தல்:***

| | | | | | |
|---|---|---|---|---|---|
| *1)* | *Company* | - | பங்கு + அமைப்பு | - | பங்கமைப்பு |
| *2)* | *Codification* | - | சட்டம் + தொகுப்பு | - | சட்டத் தொகுப்பு |
| *3)* | *Duress* | - | உடல் + காயம் | - | உடற்காயம் |

***6)*** ***தொகைச் சொற்களாக அமைத்தல்:***

***அ)*** ***வினைத்தொகை***

*1)* *Hostile witness* : பிறழ்சாட்சி

*2)* *Enactment* : செய்சட்டம்

*3)* *Fixtures* : பதிபொருள்கள்

***(ஆ)*** ***வேற்றுமைத்தொகை:***

*Convention* - மரபு நெறி

***(இ)*** ***இருபெயரொட்டுப் பண்புத் தொகை:***

நேர்மை + நெறி - நேர்மை நெறி

***7)*** ***எச்சத் தொடர்களாக அமைத்தல்:***

***ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம் :***

*Non feasance* - செய்யாப்பிழை

*Bad debt* - வாராக் கடன்

***8)*** ***ஒப்புமையாக்கத்தின் வழி உருவாக்குதல்:***

அ) ஆளி - தொழிலாளி

*Debtor* - கடனாளி

*Beneficiary* - பயனாளி

ஆ) ஆண்மை - வேளாண்மை

*Agency* - முகவாண்மை

இ) நர் - ஓட்டுநர் - அனுப்புநர்

*Privies* - இணையுநர்

*Creditor* - கடன் தருநர்

*Debtor* - கடன் பெறுநர்

ஈ) 'வூலம்' - கருவூலம்

*Hotchpot* - பொதுவூலம்

உ) 'ஒரு பொருட் பன்மொழி'

*Multioicity* - ஒரு பொருட்பல் வழக்கு

***1. கலைச் சொல்லாக்கத்தில் மேற்கொள்ளவேண்டிய முறைகள்:***

***அ) அடிப்படைச் சட்டச்சொற்களைத் தமிழாக்கிக் கொள்ளுதல் :***

| | | |
|---|---|---|
| *Right* | - | உரிமை |
| *Duty* | - | கடமை |
| *Property* | - | சொத்து |

***ஆ) சட்டக் கருத்துப் படிவங்களுக்கு (Legal concept) தமிழ் வடிவம் தருதல்;***

| | | |
|---|---|---|
| *Mensrea* | - | குற்றமனம் |

ஒவ்வொரு கருத்துப் படிவத்திற்கும் தனித்தனிச் சொற்களை உருவாக்குதல் வேண்டும்.

இ) தொடர்புடைய கருத்துகளுக்குத் தனித்தனிச் சொற்களை ஆக்கிக் கொள்ளுதல்:

| | | |
|---|---|---|
| *Act* | : | சட்டம் |
| *Law* | : | சட்ட நெறி |
| *Statute* | : | இயற்றுச் சட்டம் |
| *Enactments* | : | செய்சட்டம் |

***2. ஆங்கிலச் சொல்லுக்கு இணையான சொல் கண்டறிதல்:***

*(அ)* ஆங்கிலச் சொல்லுக்கு இணையான சொல்லைக் கண்டறியும் போது அந்த ஒரு சொல்லை மட்டும் மனதில் வைத்து நின்று உருவாக்குதல் கூடாது. அச்சொல் சார்ந்திருக்கும் குலைச் சொற்கள் *(Cognate)* அனைத்தையும் நினைவில் கொண்டு, அவ்வாறு ஆங்கிலத்தில் அமையும் அச்சொற்கள் ஒவ்வொன்றிற்கும் தமிழ்ச் சொற்களை உருவாக்குதல் வேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| *(I)* | *Right* | : | உரிமை |
| | *Prerogative* | : | அரசளி உரிமை |
| | *Privilege* | : | மதிப்புரிமை அல்லது சிறப்புரிமை |
| *(II)* | *Contract* | : | ஒப்பந்தம் |
| | *Agreement* | : | உடன் பாடு |
| | *Convenant* | : | உடன் படிக்கை |

*(ஆ) ஆங்கிலத்தில் சில சொற்கள் ஒன்றிற்கும் மேற்பட்ட சட்ட நுட்பத்தை உணர்த்துவன. அச்சொற்கள் உணர்த்தும் ஒவ்வொரு பொருளுக்கும் தனித்தனியே தமிழில் சொற்களை அமைத்தல் வேண்டும்.*

1. *Interest* : *வட்டி, உரித்தம், அக்கறை*
2. *Constitution* : *அரசமைப்பு, அமைப்பு*
3. *Charge* : *குற்றச்சாட்டு; பொறுப்புரிமை*

**3. *தனிச்சொற்களாக அமைத்தல்:***

*கலைச் சொற்கள் தனிச்சொற்களாக இருத்தல் வேண்டும்.*

*தனிச் சொற்களே புதிய சொற்களை உருவாக்குவதற்கு ஏதுவாக முன்னொட்டுகளையும் பின்னொட்டுகளையும் ஏற்றுக் கொள்ளும் தன்மையில் அமைவன. கூட்டுச் சொற்களாக இருப்பின் அவற்றோடு, பிற சொற்களைச் சேர்த்துத் தொடரில் அமைப்பதற்கு ஏதுவாக அமையாது.*

**4. *தொடர்புடைய சொற்களை உருவாக்கும் வகையில் இருத்தல்:***

*சட்டச் சொற்களை உருவாக்கும்போது அச்சொல்லில் இருந்து உருவாகும் மற்ற சொற்களுக்கு இடமளிக்கும் வகையிலும் அமைத்தல் வேண்டும்.*

| | | |
|---|---|---|
| *Law* | : | *சட்டம்* |
| *Lawful* | : | *சட்டத்திற்கு உகந்த* |
| *Legal* | : | *சட்டமுறையான* |
| *Illegal* | : | *சட்டத்திற்குப் புறம்பான* |
| *Legislation* | : | *சட்டமியற்றுதல்* |
| *Legislative* | : | *சட்டம்இயற்றும்* |
| *Legislator* | : | *சட்டமன்ற உறுப்பினர்* |
| *Legislature* | : | *சட்டமன்றம்* |
| *Lawless* | : | *சட்டத்திற்கு ஒவ்வாத* |
| *Unlawful* | : | *சட்டத்திற்கு எதிரான* |

***குலைச்சொற்கள் (Congnate Words):***

*தமிழ் மொழி சொல்வளம் மிகுந்தது. தமிழில் காணப்படும் ஒரு பொருட் பன்மொழி இதற்குத் தக்கதொரு சான்று. ஒரு பொருளைக் குறிக்கும் பல சொற்களில் ஒவ்வொன்றும் சிறு வேறுபாட்டுடன் அமைக்கப்படும்.*

*“ஒரே குடும்பத்தைச் சேர்ந்த சில ஆங்கிலச் சொற்கள் ஒரு பொருட் கிளவிகள் (Synonyms) போன்று தோன்றும். ஆனால் நுணுகி ஆராயும் போது அவற்றிற்கிடையே நுண்ணிய பொருள்வேறுபாடுகள் இருப்பதை அறியலாம்” என்பர். இப்பொருள் வேறுபாட்டின் தன்மையை அறிந்து இச்சொற்கள் சட்டத்தில் பயன்படுத்தப்படுகின்றன.*

***நிலைபேறாக்கம் – (Standardisation) :***

*ஓர் ஆங்கிலச் சொல்லுக்குப் பொருத்தமான தமிழ்சொல் இதுதான் என்று வரையறுத்து நிலைபேறாக்கம் செய்து தரவேண்டிய பொறுப்புச் சட்டத்தமிழைப் பொறுத்த வரையில் முற்றிலும் அரசின் கடமையாக அமைகிறது.*

*“மொழித் திருத்தத்திலும் நிலை பேறாக்கத்திலும் அரசுக்கு முதன்மையான பங்கு உண்டு. தனி மனிதர்களாலும் நிறுவனங்களாலும் ஆற்றப்படும் மொழிப் பணியைக் காட்டிலும் அரசு ஆற்றும் மொழிப் பணியே வலுவானதாகவும் செல்வாக்குப் பெறுவதாகவும் பொதுமக்களைக் கட்டுப்படுத்துவதாகவும் விளங்கும்” என்னும் கருத்து மற்றத் துறைகளை விடச் சட்டத் தமிழுக்குப் பெரிதும் பொருந்தும்.*

*சட்டக் கலைச் சொல்லைப் பொறுத்த வரையில் ஓர் ஆங்கிலச் சொல்லுக்கு ஒரு தமிழ்ச் சொல்லை அமைத்துக் கொள்வது குழப்பம் ஏற்படாமல் தடுக்கும்.*

***இலத்தீன் மூதுரை:***

*“Maxims” என்னும் இலத்தீன் சொல்லுக்கு “பொதுவான உண்மை, அடிப்படைக் கோட்பாடு, நன்னடத்தை விதி, பழமொழி வடிவில் அமைந்த முதுமொழி” என்பது பொருள். இதனைச் சூத்திரங்கள் என்றும் அழைப்பர். இதனையும் தமிழில் மொழிபெயர்க்க வேண்டும்.*

***அகராதிகளில் மூதுரைகள்:***

*ACTUS NON FACIT REUM*
*NISI MENS SIT REA*

*என்பது,*

*குற்றமனமில்லாச் செயல்*
*குற்றமென ஆவதில்லை*

*என்று அமைகின்றது. இதில் தமிழ்க் கவிதையின் தனிச் சிறப்புக்களாக விளங்கும் எதுகையும் மோனையும் இடம்பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கது.*

# மதுரையும் மருதமும்

***(**Friends of Madurai Trust **மதுரை மூதூர் நுண் ஆய்விருக்கையின் மெய்நிகர் உரை)***

- ***கார்த்திகேயன் பார்கவிதை, M.Sc, M.Phil***
*சூழல் செயல்பாட்டாளர்.*



*உலகின் மிகத் தொன்மையான நகரங்களில் ஒன்று மதுரை. மாட மாளிகைகள் நிறைந்த, ஆறு போன்ற அகலமான வீதிகளை உடைய மூதூர் என்று மதுரை நகரைக் குறிப்பிடுகின்றது நெடுநல்வாடை இலக்கியம். மதுரை நகர் கூடல், முக்கூடல் நகரம், நான்மாடக்கூடல், பாண்டிய மாநகர், வைகை நகரம், திரு ஆலவாய், கடம்பவனம் போன்ற பல்வேறு பெயர்களால் இந் நகரம் குறிக்கப்படுகிறது. கடம்ப மரங்கள் நிறைந்து வனமாக இருந்ததால் கடம்பவனம் என்று பெயர் பெற்றது. அதே போல் மருதை என்னும் பெயரே மதுரை என்று மருவியதாக அறிஞர்கள் கூறுவர். மதுரையைச் சுற்றியுள்ள கிராமங்களில் இன்றளவும் மதுரையை "மருதை" என்றழைக்கும் வழக்கம் இக் கருத்தை மெய்ப்பிக்கிறது. இக்கருத்து மெய்தானா என்பதைத் தொல் இலக்கியங்களின் துணை கொண்டு ஆராய்ந்து அறிய முற்படுவோம்.*

***மதுரை குறித்த இலக்கியங்களில் மருதம்:***

*வையைக் கரையில் ஓங்கி வளர்ந்த மருத மரங்கள் நிறைந்த மருதத் துறை இருந்ததாக பரிபாடலும், சிலப்பதிகாரமும் குறிப்பிடுகின்றன.*

*இதனை திருமருத முன்றுறை எனப் பரிபாடலும் (வையைத் திருமருத முன்றுறை - பரிபாடல் 22), மருதோங்கு முன்றுறை (வையை மருதோங்கு முன்றுறை – சிலப்பதிகாரம்) என சிலப்பதிகாரமும் குறிப்பிடுகின்றன. வையை வெள்ளம் கொண்டு வந்து சேர்த்த மணல் நிறைந்த அகன்ற துறையில் மருத மரங்கள் நிறைந்த சோலை இருந்ததாக மதுரை நக்கீரர் அகநானூறு 36 ஆம் பாடலில் குறிப்பிட்டுள்ளார்.*

*"வரு புனல் வையை வார் மணல் அகன் துறை*
*திரு மருது ஓங்கிய விரி மலர் காவில்"*
*மதுரை நக்கீரர், அகநானூறு 36*

*மேலும் திருமுருகாற்றுப்படையில், திருப்பரங்குன்றம் வளம் குறித்து நக்கீரர் விளக்கும் பொழுது கொத்து கொத்தாக ஒளிரும் பூக்களையுடைய மருத மரம்*

*இருந்ததாக குறிப்பிடுகிறார். திருமாலிருஞ்சோலை என்று இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ள தற்கால அழகர் கோவில் மலையில் மருத மரச்சோலை நிறைந்திருந்ததாக இரண்டாம் திருமொழி குறிப்பிடுகிறது.*

*“மருதப்பொழிலணி மாலிருஞ்சோலைமலை”*

*இரண்டாம் திருமொழி - (திருமாலிருஞ்சோலை மலைச்சிறப்பு) 348*

*இவற்றையெல்லாம் உற்று நோக்கும் பொழுது மதுரை மாநகரிலும், அதனைச் சுற்றியுள்ள பகுதிகளான திருப்பரங்குன்றம் மற்றும் அழகர்கோவில் மலைப்பகுதிகளில் மருத மரங்கள் நிறைந்து இருந்ததற்கான சான்றுகள் உள்ளன.*

***மருத மரம் எவ்வாறு இருக்கும்? எங்கு இருக்கும்?***

*மருத மரம் நெடு நெடுவென உயரமாக ஓங்கி வளரக்கூடிய மரம், அடிமரம் வெண்மையாக இருக்கும். இதனை மிக அழகாக "நெடு வெண் மருதம்" என்று எடுத்துரைத்துள்ளார் பரணர்.*

*" நெடு வெண் மருதொடு வஞ்சி சாஅய"*

*பரணர் அகநானூறு 226*

*மருத மரம் கொத்து கொத்தாகப் பூக்கும் இயல்புடையது.*

*"தேம் கமழ் மருது இணர் கடுப்ப"*



*மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரர், திருமுருகாற்றுப்படை*

*மருத மரத்தினை எங்குக் காணலாம்? என்ற கேள்விக்கு விடையளிக்கிறார் ஓரம்போகியார்.*

*" மருது உயர்ந்து ஓங்கிய விரி பூ பெரும் துறை"*
*ஐங்குறுநூறு 33 மருதம் ஓரம்போகியார்*

*மருத மரம் இயல்பாக ஆற்றங்கரையில் செழித்து வளரக் கூடிய மரம் என்பதைத் தெளிவாகச் சுட்டிக் காட்டியுள்ளார் ஓரம்போகியார். ஐந்திணைகளில் ஒன்றான மருதத் திணைக்கு மருதம் என்று பெயர் சூட்டும் அளவிற்கு மருத மரங்கள் ஆற்றங் கரைகளில் நிறைந்து வளரக்கூடிய மரம். தொல்காப்பியர் மருதத் திணை சூழலை*

*விளக்குகையில் "தீம்புனல் மருதம்" என்று குறிப்பிடுகிறார்.*

*வையை ஆற்றங்கரை மருத மரங்களால் சூழப்பட்டிருந்தது என்பதை முன்பு பார்த்தோம். காவிரி ஆற்றங்கரையிலும் மருத மரங்கள் நிறைந்திருந்தது என்பதை பரணர் பாடல் மூலமும் அறிய முடிகிறது.*

*"........ ............ ............... ................ காவிரி*

*பலர் ஆடு பெரும் துறை மருதொடு பிணித்த"*

*பரணர் குறுந்தொகை 258*

*வயல்வெளிகளில் மருத மரங்கள் சூழ்ந்து இருப்பதை சில செய்யுள் அடிகள் உறுதிப்படுத்துகின்றன.*



*"கழனி மருதின் சென்னி சேக்கும்"*

*ஐங்குறுநூறு 70 மருதம் ஓரம்போகியார்*

*"வயல்உழை மருதின் வாங்குசினை வலக்கும்"*

*மருதன் இளநாகனார், புறநானூறு 52*

*மருத மரம் நீண்ட நெடுங்காலம் நிலைத்து வாழக்கூடியது. இதனை "தொல்நிலை மருதம்" என்று குறிப்பிட்டுள்ளார் ஓரம்போகியார்*

*"தொல் நிலை மருதத்து பெரும் துறை"*

*ஓரம்போகியார் ஐங்குறுநூறு 75*

ஓரம்போகியார் கூற்றுக்குச் சான்றாக மதுரை ஊமச்சிகுளம் அருகே உள்ள வீரபாண்டி பகுதியில் இருநூறு ஆண்டுகளுக்கும் மேலாக நிலைத்திருக்கும் இரு மருத மரங்கள் உள்ளன.

சிவகங்கை மாவட்டம் திருப்புவனம் பகுதியில் மருதப் பாண்டியர் காலத்து மருத மரம் இரண்டு உள்ளன. இம்மரங்கள் காளையார் கோவில் தேர் செய்வதற்காக தேர்வு செய்யப்பட்டு வெட்டப்பட இருந்த மரங்கள். வயதில் மூத்த ஒரு பெரியவரும், அவரது பேத்தியும் இவ்விரு மரங்களைச் சின்ன மருது, பெரிய மருது சகோதரர்களாக எண்ணி வளர்ப்பதாகவும் அதனை வெட்ட விடமாட்டோம் என்று போராடிக் காப்பாற்றினர் என்பது வரலாறு. மதுரை-இராமேஸ்வரம் நான்கு வழிச் சாலை அமைக்கும் பொழுது இவ்விரு மரங்களையும் இடப்பெயர்ச்சி செய்து நட்டனர். அவை மீண்டும் துளிர்த்து இன்றளவும் நிலைத்து நிற்கின்றது என்பது நம்பிக்கைக்கும், வியப்பிற்கும் உரிய நிகழ்வு.

**இன்றைய நிலை**

மதுரைக்கு மதுரை என்று பெயர் வழங்கிய மரமாகக் கருதப்படும் மருத மரம் இன்று மதுரை மாநகரில் அங்கொன்றும் இங்கொன்றுமாக மட்டுமே உள்ளன. வைகை ஆற்றின் நிலக்கோட்டை, சோழவந்தான், மேலக்கால் பகுதிகளில் சில மருத மரங்கள் உள்ளன. ஆனால், நகருக்குள் ஒரு பெரிய மருத மரம் கூட வைகை ஆற்றங்கரையில் இல்லை என்பது வருத்தப்படக் கூடிய நிலை. சாலை விரிவாக்கம், நகரமயமாக்கல், அதிகப்படியான பயன்பாடு போன்ற காரணங்களால் மருத மரங்கள் எண்ணிக்கை விரல் விட்டு எண்ணும் அளவிலேயே உள்ளன.

மருத மரம் விதை நல்ல முளைப்புத் திறன் உடைய மரம். எளிதாக மரக்கன்றுகளை உருவாக்க இயலும். மருத மரக்கன்றுகளை வைகையின் இரு கரைகளிலும் நட்டு வளர்த்து மீண்டும் திருமருதத்துறையாக மதுரையை மாற்ற இயலும். அரசு, மாவட்ட நிர்வாகம், இயற்கை ஆர்வலர்கள், பொது மக்கள் என அனைவரும் ஒன்று கூடி செயல்பட்டால் இந்த இலக்குச் சாத்தியமே.



# பதிற்றுப் பத்து

**அன்பு ஜெயா**, **நிறுவனர்**,
*தமிழ் வளர்ச்சி மன்றம், சிட்னி*



*முன்னுரை*

*பதிற்றுப் பத்து செவ்விலக்கியங்களில் ஒன்றாக வகைப்படுத்தப்பட்டுள்ளது. பண்டைத் தமிழ் இலக்கியங்களில் 41 நூல்கள் செவ்விலக்கியங்கள் என்று வகைப்படுத்தப்பட்டுள்ளன.*

*தொல்காப்பியம்,*

*எட்டுத்தொகை நூல்களில் அடங்கியுள்ள எட்டு நூல்கள்,*

*பத்துப்பாட்டில் அடங்கியுள்ள 10 நூல்கள்,*

*பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் அடங்கியுள்ள 18 நூல்கள்,*

*மற்றும்*

*சிலப்பதிகாரம்,*

*மணிமேகலை,*

*முத்தொள்ளாயிரம்,*

*இறையனார் களவியல்*

*- ஆகிய 41 நூல்களும் செவ்விலக்கியங்களாகும்.*

*இவற்றின் பெருமையை உலகறியச் செய்வதற்காக, சென்னை செம்மொழித் தமிழாய்வு மையம், 41 செவ்விலக்கியங்களையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்ப்பு செய்யும் சிறந்த பணியில் ஈடுபட்டுள்ளது. ஆங்கிலத்தில் மட்டுமின்றி, கன்னடம், தெலுங்கு, மலையாளம், இந்தி மற்றும் மராத்தி மொழிகளிலும் மொழி பெயர்ப்பு நடந்து வருகிறது.*

**எட்டுத்தொகை நூல்கள்**

*எட்டுத்தொகை நூல்களைப் பற்றி பேசுபவர்கள் அனைவரும் குறிப்பிடுகின்ற வெண்பா ஒன்று உள்ளது.*

*நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு*

*ஒத்த பதிற்றுப்பத்து ஓங்கு பரிபாடல்*

*கற்றறிந்தார் ஏத்தும் கலியோடு அகம்புறம் என்று*

*இத்திறத்த எட்டுத் தொகை.,*

*என்ற வெண்பாதான் அது.*

*இந்தப் பாடலில் குறிப்பிடப்பட்ட, நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு ஆகிய எட்டு நூல்களில் பதிற்றுப்பத்தும், புறநானூறும் புறப்பொருள் பற்றிய நூல்களாகும். பரிபாடல் அகமும் புறமும் கலந்து வரும் நூல், அகநானூறு, நற்றிணை முதலான மற்ற ஐந்து நூல்களும் அகத்திணை சார்ந்த நூல்களாகும்.*

*இந்த எட்டுத்தொகை நூல்களில் நான்காவதாக அமைந்திருப்பது பதிற்றுப்பத்து.*

*பதிற்றுப்பத்து ஏறத்தாழ 1800 ஆண்டுகளுக்கு முன்பு சேர நாட்டை ஆட்சி புரிந்த பத்து சேர மன்னர்களைப் பற்றிப் பத்துப் புலவர்கள் பாடிய பாடல்களின் தொகுப்பாகும். பத்துப் பத்து அகவற்பாக்களாகப் பாடிய பாடல்களின் தொகுப்பு என்பதால் இதற்கு பதிற்றுப்பத்து என்ற பெயர் வழங்கலாயிற்று. ஆனால், இந்த நூலின் முதல் மற்றும் கடைசிப் பத்துப் பாடல்களும் கிடைக்கப் பெறவில்லை. மொத்தம் 80 பாடல்களே கிடைத்துள்ளன. முதல் மற்றும் இறுதிப் பத்துப் பாடல்கள் கிடைக்கவில்லையானாலும், இவற்றைச் சார்ந்த பாடல்கள் சில தொல்காப்பிய உரைகளாலும், "புறத்திரட்டு" என்னும் தொகை நூலாலும் தெரிய வருகின்றன.*



*இந்நூலின் கடவுள் வாழ்த்துப் பாடலும் தொல்காப்பிய உரையிலிருந்து (பொருளதிகாரம். புறத். சூ.16 நச்) ஆராய்ச்சியாளர்களால் ஊகித்து அறியப்பட்டதே என்று தெரிகிறது. ஏனெனில், கடவுள் வாழ்த்துப் பாடல் பதிற்றுப்பத்து நூலைப் போல அகவற்பாவால் அமையாமல், மருட்பாவில் அமைந்துள்ளது நோக்கத்தக்கது என்று அறிஞர்கள் கூறுகின்றனர்.*

### *பதிற்றுப்பத்துப் பதிகங்கள்*

*பதிற்றுப்பத்து நூலைத் தொகுத்தவர், ஒவ்வொரு பத்து பாட்டிற்கும் ஒரு பதிகத்தை இயற்றிச்*

*சேர்த்துள்ளார். இப்பதிகங்கள் நூலின் காலத்திற்கு மிகவும் பிற்பட்டனவாக இருக்கலாம் என்று கருதப்படுகிறது. பதிகங்கள் சிறப்பான கட்டமைப்பைக் கொண்டவை. முதற் பகுதி கவிதையாகவும், இரண்டாம் பகுதி உரைநடையாகவும் அமைந்துள்ளன. இவை, சோழமன்னர்களின் கல்வெட்டுகளில் காணப்படும் மெய்க்கிகீர்த்திகளை ஒத்து, அந்தப் பாடலில் பாடப்பட்ட மன்னனின் மெய்க்கீர்த்தி போலப் பதிகம் அமைந்துள்ளது.*

*ஒவ்வொரு பதிகத்திலும் அந்தப் பத்துப் பாடல்களைப் பாடியவர் பற்றியும் அந்தப் புலவரின் சிறப்பு, அந்தப் புலவர் பெற்ற பரிசில் பற்றியும் கூறப்பட்டுள்ளது. அத்துடன் அந்தப் பாடல்கள் எந்த மன்னனைப் பற்றிப் பாடப்பட்டுள்ளன என்றும் அந்த மன்னனின் சிறப்புகள் என்ன என்பது பற்றியும் குறிப்பிடுகின்றன.*

*இந்தப் பத்துப் பாடல்களில் ஒவ்வொரு பாடலுக்கும், அந்தப் பாடலில் வரும் ஒரு சிறந்த சொற்றொடரைக் கொண்டே அந்தப் பாடலுக்கான பெயரும், அதாவது தலைப்பும், கொடுக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. உதாரணமாக, ‘‘புண்ணுமிழ் குருதி’’, ‘‘மறம்வீங்கு பல்புகழ்’’, ‘‘பூத்த நெய்தல்’’, ‘‘சான்றோர் மெய்ம்மறை’’, ‘‘நிரைய வெள்ளம்’’, ‘‘துயிலின் பாயல்’’, ‘‘கூந்தல் விறலியர்’’ போன்றவை இரண்டாம் பத்தில் உள்ள சில பாடல்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ள பெயர்கள் அல்லது தலைப்புகள்.*

*ஒவ்வொரு பாட்டிற்கும் பாட்டிற்கான திணை கூறாமல், துறை, வண்ணம், தூக்கு, பெயர் என்பன குறித்து கூறியுள்ளது பதிற்றுப்பத்துக்கே உரிய தனிச் சிறப்பாகும். இதில், வண்ணம் என்பது, எழுத்துக்களின் அமைதியாலும் சொற்களின் இணைப்பாலும் அமையும் ஓசை வகை. பிற்காலத்தில் சந்தம் என்று கூறப்பட்டது. இசைப் பாடல்களில் மெட்டு என்று சொல்லும் உறுப்பைப் போன்றது இது. இந்தப் பதிகங்களைப் பற்றி தமிழறிஞர் T.V.சதாசிவப் பண்டாரத்தார் பல விரிவான விளக்கங்களை அளித்துள்ளார்.*

*பதிற்றுப்பத்துப் பாடல்கள் உதியஞ்சேரல் மற்றும் அந்துவன் சேரலிரும்பொறை என்ற இரண்டு மரபினைச் சார்ந்த மன்னர்களின் வரலாற்றை நமக்குக் கூறுகின்றன. இந்த இரண்டு மரபினரும் தாயாதிகள், அதாவது மூதாதையர் வழி உறவினர்கள் என்று அறியப்படுகிறது.*

*பதிற்றுப்பத்தில் உள்ள பாடல்கள் சேர மன்னர்களின் கல்வித்திறம், அவர்களுடைய மனத்திண்மை, புகழ், கொடையுள்ளம், கலைஞர்களையும் கவிஞர்களையும் காக்கும் பண்பு, படை வன்மை, போர்த்திறம், குடியோம்பல் முறை, மற்றும் சேர மன்னர்களின் பல்வகைத் திறன்களைப் பறைசாற்றுகின்றன.*

*முன்பே கூறியது போல இந்த பாடல்கள் அனைத்தும் புறத்திணையைப் பொருளாகக் கொண்டு பாடப்பட்டவை.*

*இந்த நூலின் காலம் கி.பி. 2ம் நூற்றாண்டு என்று கருதப்படுகிறது. கபிலர், பரணர் ஆகிய கடைச்சங்கப் புலவர்களால் பாடப்பெற்றுள்ளதால் பதிற்றுப்பத்து கடைச்சங்க கால நூல் என்று கூறப்படுகிறது.*



***உரையாசிரியர்கள்***

*1904ம் ஆண்டு உ. வே. சா. அவர்கள் எழுதிய உரை.*

*பதிற்றுப்பத்துக்கு பழைய உரை ஒன்று உண்டு. இந்த உரையாசிரியர் யார் என்பதை அறிய இயலவில்லை.*

*ஔவை துரைசாமிப்பிள்ளை உரை*

*யாழ்ப்பாணம் சு. அருளம்பலவனார் ஆராய்ச்சியுரை*

*புலியூர் கேசிகன் உரை*

*அ.மா. பரிமணம் உரை*

*ஆகியவை முதன்மையானவையாகக் கூறப்படுகின்றன.*

*பாடிய சான்றோரும், பாடப்பட்ட சேரமன்னர்களும்*

*பதிற்றுப்பத்து பாடிய சான்றோர்கள் 10 புலவர்கள். ஆனால் எட்டு பேருடைய பெயர்களும், அவர்கள் எழுதிய பாடல்கள் மட்டுமே நமக்கு கிடைத்துள்ளன.*

ஒரே மரபில் பிறந்த பத்து மன்னர்கள் குறித்து, தொடர்ச்சியாகப் புலவர் பாடிய செய்யுட்கள் காலமுறை தவறாது இடம் பெற்றிருப்பதுவே பதிற்றுப்பத்து நூலின் சிறப்பாகும்.

பதிற்றுப்பத்தில் சேர மன்னர்களின் இரண்டு மரபினரை பற்றிய பாடல்கள் காணப்படுகின்றன. முதல் மரபினர் சேரமான் உதியஞ்சேரலாதனும் அவனுடைய வழித்தோன்றல்களும். ஒன்று முதல் ஆறாம் பத்து முடிய இவர்களைப் பற்றிய பாடல்களாக அமைந்துள்ளன. இரண்டாம் மரபினர் சேரமான் அந்துவன்சேரல் இரும்பொறை வழியினர். இவர்களைப்பற்றி 7 8 9, பத்தாம் பத்து பாடல்கள் குறிப்பிடுகின்றன.

ஒவ்வொரு பத்தையும் பாடிய புலவர்கள் யார்யார், அவர்களால் பாடப்பெற்ற மன்னர்கள் யார்யார் என்பதை சுருக்கமாக முதலில் பார்க்கலாம்.

பத்தின் பெயர்

பாட்டுடைத் தலைவன்

பாடிய புலவர்

முதலாம் பத்து



உதியஞ்சேரலாதனாக இருக்கலாம் என்று கூறப்படுகிறது

பாடியவர் தெரியவில்லை

இரண்டாம் பத்து

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்

குமட்டூர்க் கண்ணனார்

மூன்றாம் பத்து

பல்யானைச் செல்கெழுகுட்டுவன்

பாலைக் கௌதமனார்

நான்காம் பத்து

களங்காய்க்கண்ணி

நார்முடிச்சேரல்

காப்பியாற்றுக் காப்பியனார்

ஐந்தாம் பத்து

கடல்பிறக்கு ஓட்டிய செங்குட்டுவன்

பரணர்

ஆறாம் பத்து

ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்

காக்கை பாடினியார்

நச்செள்ளையார்

ஏழாம் பத்து

செல்வக் கடுங்கோ வாழியாதன்

கபிலர்

எட்டாம் பத்து

தகடூர் எறிந்த பெருஞ்சேரல்

இரும்பொறை

அரிசில் கிழார்

ஒன்பதாம் பத்து

இளஞ்சேரல் இரும்பொறை

பெருங்குன்றூர் கிழார்

பத்தாம் பத்து

யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறையையாக இருக்கலாமென்று கூறப்படுகிறது.

பாடியவர் தெரியவில்லை

அடுத்ததாக, ஒவ்வொரு பத்துப்பாடல்களையும் பாடிய புலவர்கள் பற்றியும், அவற்றின் பாட்டுடைத் தலைவர்களாக உள்ள சேர மன்னர்கள் பற்றியும் விரிவாகப் பார்க்கலாம். அத்துடன், பதிற்றுப்பத்தில் அமைந்துள்ள சில பாடல்களையும் பார்க்கலாம்.

தொடர் – 5

# எளிய முறையில் யாப்பறிவோம்!



**நெருப்பலையார் இராம. இளங்கோவன்,**
பொருளாளர்,
பெங்களூரு தமிழ்ச் சங்கம்

தொடர்ச்சி. . . .

பாடம்-5. தளை

கடந்த பாடத்தில் தளைகளைப் பற்றி விரிவாகக் கண்டோம். அதில் தளைகளின் ஏழு வகைகளில் மூன்று வகைகள் வெண்டளை வரை அறிந்தோம். இனி மீதி நான்கு தளைகளை இப்பாடத்தில் காண்போம். வெண்டளையை அடுத்த இயற்சீர் வெண்டளையிலிருந்து தொடங்குவோம்.

**4) இயற்சீர் வெண்டளை:**

தேமா, புளிமா என்னும் சீர்களுக்கு முன்னால் நிரையசையும், கூவிளம், கருவிளம் என்னும் இவ்விரண்டு சீர்களுக்கு முன்னால் நேரசையும் வருதலை இயற்சீர் வெண்டளை என்பர். சுருக்கமாகச் சொல்லும்போது மா முன்பாக நிரையசையும், விளம் முன்பாக நேரசையும் வருவதை இயற்சீர் வெண்டளை என்றறிக. இந்த இயற்சீர் வெண்டளைகளைச் சுருக்கமாக ஈரசைச் சீர் என்பர். இந்த இயற்சீர் வெண்டளைகளைக் கொண்ட பாடலொன்றை நாலடியார் என்ற வெண்பாப் பாடல் வழியாக கீழே அறிவோம்.

இளையான் அடக்கம் அடக்கம்; கிளைபொருள்

இல்லான் கொடையே கொடைப்பயன் - எல்லாம்

ஒறுக்கும் மதுகை உரனுடை யாளன்

பொறுக்கும் பொறையே பொறை.

இந்த வெண்பாவில் வெண்சீர் வெண்டளையே கலக்காமல் முழுக்க முழுக்க ஈரசைக் கொண்ட இயற்சீர் வெண்டளையால் அமைந்துள்ளதைக் காண்க. அடுத்து…….

**5) ஒன்றிய வஞ்சித் தளை:**

கனிச் சீருக்கு முன்னால் நிரையசை வருவதுதான் ஒன்றிய ( ஒத்து வருகிற) வஞ்சித் தளையாகும். எடுத்துக் காட்டாகக் கீழே உள்ள பாடலைக் காண்போம்.

*வினைத்திண்பகை விழச்செற்றவன்*
*வனப்பங்கய மலர்த்தாளிணை*

*என்ற இப்பாடல் அடிகளில் ஒன்றிய வஞ்சித்தளை வந்திருத்தலைக் காண்க.*

*வினைத்+ திண்+ பகை= புளிமாங்கனி. புளிமாங்கனிக்கு முன்னால் விழச் என்ற நிரையசை வந்திருத்தலை உணர்க. அதாவது நிரையசை முன்னால் நிரையசை ஒன்றி வந்திருத்தலே ஒன்றிய வஞ்சித் தளையாகும். கனிச்சீராக வருவது வஞ்சிப்பாவில் தான் என்பதை ஏற்கெனவே சுட்டி இருப்பதை நினைவு கூர்க. தொடர்ந்து காண்பது………*




***6) ஒன்றாத வஞ்சித்தளை:***

*வஞ்சிப் பாவில் வரும் கனிச்சீருக்கு முன்பாக, நேரசை வந்தால் அது ஒன்றாத வஞ்சித் தளையாகும். கனிச்சீர் என்பது, தேமாங்கனி, புளிமாங்கனி, கூவிளங்கனி, கருவிளங்கனி என்ற சீர்களாகும். எடுத்துக் காட்டாக ஒரு பாவினைப் பார்ப்போம்………*

*வானோர்தொழ வண்டாமரைத்*

*தேனார்மலர் மேல்வந்தருள்*

*முதல் சீரான வானோர்தொழ என்ற சீரின் ஈற்றசையான தொழ என்ற ஈற்றசை நிரையசையில் முடிந்திருக்கிறது. இந்த நிரையசைக்கு முன்னால் அடுத்த சீர் நேரசையில் வண் என்று தொடங்குவதால் தளை ஒன்றி வரவில்லை. இதனால்*

*இது ஒன்றாத வஞ்சித்தளை என்பதை நினைவு கூர்க. அடுத்து இறுதியாகக் காண இருப்பது .....*

***7) கலித்தளை:***

*காய்ச்சீருக்கு முன்பு நிரையசை வருதலே கலித்தளையாகும். எடுத்துக் காட்டாக ஒரு பாவினைப் பார்ப்போம்.*

*விலங்குகளின் மணிமுடியே வியன்படைப்பின் தனியரசே*
*நலமளிக்கும் புதுமைகளை நனிபடைத்த மனிதாநீ*
*பலவுலகும் அடிப்படுத்தும் பகரரிய திறனுடையாய்*
*பொலமிகுநின் சிறப்பதனைப் புகன்றிடுதல் இயலாதே!*



*இக் கலிப்பாவினை ஊன்றிக் காணுங்கள். நான்கு அடிகளுமே கலித்தளையே வருமாறு அமைந்துள்ளன. எல்லாச் சீர்களுமே காய்ச்சீர் என்ற வெண்சீர்களாக வந்துள்ளன. எல்லா காய்ச்சீர்களுக்கு முன்பு நிரையசை வந்துள்ளதால் இது கலித்தளை ஆகும். இப்படி வந்தால் சிறப்புக்குரிய கலித்தளையாகும்.*

*இறுதியாக, தளை பற்றிய பாடத்தில் சுருக்கமாக அறிவது என்னவெனில், நேரொன்றிய ஆசிரியத் தளை; நிரையொன்றிய ஆசிரியத் தளை இரண்டும், வெண்சீர் வெண்டளை, இயற்சீர் வெண்டளை இரண்டும், ஒன்றிய வஞ்சித் தளை, ஒன்றாத வஞ்சித்தளை இரண்டும், கலித்தளை ஒன்றும் ஆக மொத்தம் தளைகள் ஏழு என்று மனத்தில் நிறுத்துக.*

# கொற்றவை

***முனைவர் ப. தேவி அறிவுச் செல்வம்,***

*கோயில் கட்டிடக்கலை மற்றும் சிற்பத்துறை கள ஆய்வாளர்*



***கொற்றவை பெயர்க் காரணம்:***

*கொற்றம் + தவ்வை, கொற்றம் + அவ்வை, கொல்,*

*கொற்றம் தருபவள் கொற்றி எனக் கொள்ளலாம். தவ்வை - மூத்தவள், வெற்றி தரும் மூத்தவள், வெற்றிக்குரிய தெய்வமாதலால் இவளை வழிபட்டால் எதிரிகளை வெல்லலாம் எனவும், பகைவர்களைக் கொல்வதற்குத் துணை புரிபவளாக வணங்கப்பட்டாள்.*

***கொற்றவையின் வேறு பெயர்கள்:***

*ஐயை, கார்த்திகை, கௌரி, மகிடறகாய்த்தாள், எண்டோளி (எட்டுத் தோள்களை உடையவள்), விந்தை எழிலரி யேறி, மேதித்தலை, மிசைவீசயை, அந்தரி கலை யானத்தி, பாய் கலைப் பாவை, கலையமர் செல்வி, கலையரியூர்தி, கலையூர்தி கன்னி, கலையுகப்பாள், வன்மானுகைத்த கொடி, முது கோதை, அணங்கு, பழையோள், பாலைக் கிழத்தி.*

***2.தொல்லியல் சான்றுகள்:***

*மறையூர், ஆதிச்சநல்லூர்.*

*1.மறையூர். கொற்றவை பாறை ஓவியமானது சிவப்பு நிறமாக உள்ளது. இவளை மான்கள் சூழ்ந்து இருப்பதாக வரைந்துள்ளனர். இப்பாறை ஓவியத்தின் காலம் 5000 முதல் 7000 வரை கணக்கிடப்பட்டுள்ளது.*

*2.ஆதிச்சநல்லூர் கொற்றவை. முற்காலப் பாண்டியர்களின் தலைநகரமாக இருந்த கொற்கை அருகே ஆதிச்சநல்லூரில் கிபி 1876 முதல் இப்பொழுது 2022 வரை நடைபெற்ற அகழாய்வில் 10,000க்கும் மேல் தொல்பொருள்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. அதில் உடைந்த தாழியின் மேல் பகுதியில் நின்ற நிலையில் மெலிந்த தேகம் கொண்ட பெண் உருவமும் (மார்பகங்கள் காட்டப்பட்டுள்ளன) இடதுபுறம் மான், முதலை/ பல்லி, ஆமை, வலது புறம் நன்கு வளர்ந்த நிலையிலான நெல் /கரும்பு/ வாழை அதன் மீது அமர்ந்த நிலையில் கொக்கு/ நாரை, மீனை வாயில் கவ்வியது மாதிரியாக ஒட்டுருவமாக கிடைத்ததே தமிழகத்தில் மிகவும் தொன்மையான பெண் தெய்வமாகக்*

*கருதப்படுகிறது. மானுடன் இருப்பதால் இது கொற்றவை என உறுதிப்படுத்தப்படுகிறது. இவை ஒரு நதிக்கு அருகில் இருப்பதாகக் காட்சிப்படுத்தப் பட்டிருக்கிறது. இதில் கரும்பு/ நெல் பயிரினைக் காட்டி இருப்பது வேட்டுவ நிலையில் இருந்த தாய் தெய்வம் வேளாண் தலைமைக்கு மாறியதை எடுத்துக்காட்டும் விதம் எனக் கருதலாம். இச் சிற்பக் காட்சி அகத்தையும் புறத்தையும் ஒரே நேரத்தில் ஒரு சேரக் காண்பிக்கக் கூடியதாகவும் தமிழகத்தில் கிடைத்துள்ள கொற்றவை உருவங்களின் மிகத் தொன்மையானதாகவும் உள்ளது.*

*3.பெருங் கற்காலத்தில் அதாவது 5000 வருடங்களுக்கு முன்பாக செங்கம் பகுதியில் இரண்டு தலையற்ற உடல்கள் கிடைத்துள்ளன. அவை பெருங்கற் சின்னங்களுக்கு மேலேயே வைத்துள்ளனர். இது தற்பலி கொடுத்ததற்கான ஆதாரமாகக் கருதலாம்.*

***3.இருப்பிடம்:***

*இலக்கியத்தில் கொற்றவையின் இருப்பிடம். கொல்லும் பாவையான கொற்றவை, தன்னால் கொல்லப்பட்டு இறந்தோரைப் புதைக்கும் இடமான சுடுகாட்டையே வாழ்விடமாகக் கொண்டு இருந்ததை சங்கக் காலப் பாடல் தெரிவிக்கிறது. "கடவுள் பெயரிய கானமோடு கல்லுயர்ந்து" பதிற்றுப்பத்து 98. "கானமர் செல்வி" என அகநானூறு 89: 8. சொல்லுகிறது.*

*மேலும் கோயில் அர்த்த மண்டப வடக்குக் கோட்டம், ஏரிக்கரை, குளக்கரை, ஆறு ஓரங்களில் காணப்படுகிறாள்.*

***4. திணைக் கடவுளாகக் கொற்றவை:***

*தொல்காப்பியத்தில் குறிஞ்சி நிலக் கடவுளாக முருகன் மட்டும் அல்லாமல் கொற்றவையையும் கடவுளாக இளம்பூரணார் குறிப்பிடுகிறார். மலையும் மலை சார்ந்த இடத்தில் கடவுளாக வழிபட்டதை அதாவது குறிஞ்சி நிலக் கடவுளாக கொற்றவை உறைவதாக குறுந்தொகை 218 கூறுகிறது. குறிஞ்சியும் முல்லையும் நிலை மாறி பாலைத் திணை உருவாகும். இப் பாலைத் திணை மக்களும் கொற்றவயை வழிபட்டதை அகநானூறு 63, 337 எடுத்துரைக்கிறது. முல்லை நில தெய்வமாகவும்*



*கொற்றவை இருந்துள்ளாள். அதனை அகநானூறு 89, 345 ஆகிய பாடல்கள் எடுத்துக் கூறுகின்றன. மதுரையில் முல்லைத் திணையின் ஆதி குடிப் பெண்ணான மாதிரி ''பூங்க ணியக்கிக்குப் பான்மடை கொடுத்துப் பண்பிற் பெயர்வோள்'' என அங்குள்ள பெண் தெய்வத்திற்குப் பால் சோறு கொடுத்து வழிபட்டதை சிலம்பு கூறுகிறது.*

***5. இலக்கியங்களில் கொற்றவை:***

*1.பரிபாடல் 11 இல் "நெற்றி விழியா நிறைத் திலகம் இட்டாளே கொற்றவைகா கோலங் கொண்ட ஓர் பெண்" என்ற வரியில் கொற்றவை பற்றிய குறிப்பு கிடைக்கிறது.*

*2. கொற்றவையின் போர்க் கருவியாகச் சூலம், நெடுவேல், வில், வாள் போன்ற ஆயுதங்கள் இருந்ததாகவும், ஆயுதங்களில் கொற்றவை உறைவதாகவும் மக்கள் நம்பினர் எனச் சிறுபாணாற்றுப்படை (94-98) கூறுகிறது.*

*''அழல் திகழ்ந்திமைக்கும் அஞ்சு வரு நெடுவேல் சுழல் தொடித் தடக்கைக் காரியும் நிழல் நிகழ"*

*3. "கடவுள் பெயரிய கானமொடு கல்லுயர்ந்து" பதிற்றுப்பத்து 9:8*

*4."கானமர் செல்வி" அகநானூறு 89: 8*

*5."எல்லாம்வல் எல்லா பெருங்காட்டுக் கொற்றிக்குப் பேய் நொடித் தாங்கு" கலித்தொகை மரு.கலி. பக் 24*

*6. "மலைமகள் மகளை மற்றோர் கூற்றே" திருமுருகாற்றுப்படை :257*

*7. "விடர் முகை யடுக்கதத்து விறல்கெழு சூலி" குறுந்தொகை: 218*

***6.சிலம்பு காட்டும் கொற்றவை:***

*வேட்டுவ வரியில் வெட்சி மலரைச் சூடி போர் வீரர்கள் நிரை கொள்ளச் செல்லும்போது கொற்றவையும் உடன் செல்வாள். கொற்றவை சிற்பத்தின் மேல் போர் வீரர்கள் தங்கள் போர்க் கருவிகளை நீராட்டி நிறுத்தி வழிபட்டுள்ளனர். வேடர்களுக்கும், எயினர்களுக்கும் வெற்றி தரும் வேட்டை தெய்வமாகவும், மன்னர்களுக்கு வெற்றியை அளிக்கும் போர்த் தெய்வமாகவும் கூறப்பட்டுள்ளது. கையில் வாளைத் தாங்கிச் செல்பவராகவும் தலையில் பிறை, நிலா அணிந்தவளாகவும், மானை ஊர்தியாக உடையவள் என்றும் சிலம்பு தெரிவிக்கிறது. பாலை நில மக்களும் கொற்றவையை வேண்டியதும் வணங்கியதும் தெரிய வருகிறது. கொற்றவை கையில் வில், வாள் போன்ற போர்க் கருவிகளுடன் காட்டப்பட்டுள்ளாள். தலைபலி கொடுத்ததை*

*தெரிவிக்கிறது. சிவனுக்குரிய அணிகலன்களுடன் தலையில் பிறை, நிலா, யானை தோல் போர்த்தி அதாவது கஜ சம்காரர், இவை எல்லாம் கொற்றவை என்னும் பெண் தெய்வ வழிபாட்டில் இருந்து ஆண் தெய்வ வழிபாட்டிற்கு மாற்றம் அடைகிறது என்பதைச் சிலம்பு காட்டுகிறது. கொற்றவையின் கையில் அரிந்த தலையை கொடுப்பதை பரணி காட்டுகிறது. கல்வெட்டுகளில் இதனை அரிகண்டம், நவகண்டம் என்று குறிப்பிடுகின்றனர்.*

***7. கொற்றவையின் ஆயுதங்கள்/ போர்க்கருவிகள்:***

*சூலம், நெடுவேல், வில், வாள் போன்ற ஆயுதங்கள் இருந்ததாகவும், அவ்விடங்களில் கொற்றவை உறைவதாகவும் மக்கள் நம்பினர் என சிறு பாணாற்றுப் படை 94 -98 கூறுகிறது.*

***8.வாகனங்கள்:***

*மானை வாகனமாகச் சிலம்பு, தேவாரம், நாலாயிரத்து திவ்ய பிரபந்தம் கொற்றவையின் வாகனங்களாக காட்டுகின்றன. சங்கக் கால மக்கள் கலைமானை வேட்டையாடுவதில் விருப்பமுள்ளவர்களாக இருந்துள்ளதால் அந்த வேட்டையில் வெற்றி தரும் கொற்றவைக்கு கலைமானையே வாகனமாக கொடுத்துள்ளனர் எனக் கருதலாம் அல்லது மானை குலக் கொடியாகக் கொண்ட மக்களைக் கொற்றவை வழிபாட்டில் இருந்த மக்கள் வெற்றியடைந்ததைக் குறிப்பிடும் விதமாகவும் கருதலாம். சேவலும் காட்டப்பட்டுள்ளது.*

***எருமை:***

*சங்கக் காலத்தில் மைசூர் மாநிலம் எருமைநாடு எனப்பட்டதும் எருமைநாட்டுச் சூரனைக் கொன்றதால் மகிஷாசுரமர்த்தினி என்றும் கருதலாம் என அறிஞர்கள் கூறுகின்றனர்.*

***சிங்கம்:***

*வட இந்தியப் பகுதிகளில் சிங்கம் வாகனமாக காட்டப்பட்டுள்ளது. வட இந்திய வழிபாட்டுக் கலப்பு வரும் பொழுது சிங்க வாகனமும் உடன் இணைவதாகக் கருத்து வைக்கப்படுகிறது.*

***9. தற்பலி/நவகண்டம்/ அரிகண்டம்:***

*பெருங் கற்காலத்தில் அதாவது தமிழகத்தின் 5000 வருடங்களுக்கு முன்பாக செங்கம் பகுதியில் இரண்டு தலையற்ற உடல்கள் பெருங் கற் சின்னத்தின் மேலேயே வைத்துள்ள மாதிரி கிடைத்துள்ளன. இதனை தற்பலி கொடுத்ததற்கான ஆதாரமாகக் கருதலாம். அதாவது சங்கக் காலத்துக்கு முன்பே நவகண்டம் போன்று கொற்றவைக்குத் தன் தலையைத் தானே வெட்டி தற்பலி*

*கொடுக்கும் பழக்கம் இருந்ததைத் தெரிந்து கொள்ள முடிகிறது. "இட்டுத் தலையெண்ணு யெயினர்க் கல்லது துட்டுத் தலை போகா தொல்குடி" எனச் சிலம்பு :12: 20- 21 தலைபலி பற்றிச் சான்று தருகிறது.*

### *10. குருதிப் பலி*

*அயிரை மலையில் இருந்த கொற்றவையானவள் வீரர்களுடைய இரத்த பலி இல்லாத நிவேதனத்தை ஏற்றுக் கொள்ள மாட்டாள் என பதிற்றுப்பத்து 79:16-18 தெரிவிக்கிறது. அதாவது குடக்கோ இளஞ் சேரல் என்ற மன்னன் எதிரிகளைப் போரில் வென்று, கொன்று அவர்களின் குருதியைக் கொற்றவைக்குப் படையலிட்டு வழிபட்டுள்ளான் என்றும் போர் தொடுப்பதற்கு முன் வாள் விழா நடத்தியதையும் பதிற்றுப்பத்து ஆறாம் பத்து தெரிவிக்கிறது. வேட்டுவர்கள் கொற்றவைக்குத் தங்கள் வெற்றியின் காணிக்கையாக இரத்தத்தைக் கொடுத்துள்ளனர் என வேட்டுவ வரிப் பாடல் எண் 18 வழியாகத் தெரிந்து கொள்ள முடிகிறது. மேலும் குருதிப் பலியிட்டு வழிபட்டதை அகநானூறு 309:1-6 தெரிவிக்கிறது.*

*"நிறம்படு குருதி:*

*"புறம்படி னல்லது மடை யெதிர் கொள்ளா வஞ்சிவருமரபிற் கடவுளயிரை நிலைஇக்" ( பதிற்றுப்பத்து :79:16-குரு*

*"வயவாள் எறிந்து, வில்லின் நீக்கி,*

*பயம் நிரை தழீஇய கடுங்கண் மழவர்,*

*அம்புசேண் படுத்து வன்புலத்து உய்த்தென,*

*தெய்வம் சேர்ந்த பராரை வேம்பில்*

*கொழுப்பா வெறிந்து, குருதி தூஉய்" ( அகம்:309:1-6)*

### *11.கல்வெட்டில் கொற்றவை:*

*திருப்பரங்குன்றம் அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் என்னும் அறுபடை வீட்டின் முதல் படைவீட்டு கோயில். இக்கோயிலின் அர்த்தமண்டபத்தில் உள்ள தூணில் சதுர பாகத்தில் 14 வரிகள் கொண்ட வட்ட எழுத்துக் கல்வெட்டு உள்ளது. கல்வெட்டுச் செய்தியானது மாறன் சடையன் என்னும் பாண்டிய மன்னனின் ஆறாவது ஆட்சியாண்டில் அதாவது கிபி 773 இல் அம்மன்னனின் முதல் அமைச்சரான சாத்தன் கணபதியின் மனைவியான நக்கன்கொற்றி, துர்க்கைக்கும், ஜேஷ்டாவிற்கும் குடைவரைக் கோயில் எடுத்ததைத் தெரிவிக்கிறது.*



2.திருவோத்தூர் வேதபுரீஸ்வரர் கோயில் நடராஜர் மண்டப கிழக்குச் சுவரில் உள்ள கல்வெட்டு. காலம் கிபி 1277. தமிழ் எழுத்து. இக் கோயிலைச் சார்ந்த தேவரடியார் உண்ணாமுடையார் என்பவர் மகள் சம்பா என்பவள் இந்த ஊரில் அவள் எடுப்பித்த கானகர் செல்வி அம்மை அதாவது கொற்றவை வழிபாட்டுக்கு நிலம் வேண்டி செங்கேணி வீராகரன் ஆளப்பிறந்தான் என்கிற இராசராச சம்புவராயரிடம் முறையிட்டு புலியாடு பெரும் பாக்கத்தில் 2000 குழி நிலத்தினை பிடாரியிடம் தானமாக இராசராச சம்புவராயர் வழங்கியுள்ளார் என ஒற்றுமை பற்றிக் கல்வெட்டு தெரிவிக்கிறது. (ஆதாரம்: தமிழ்நாட்டு கல்வெட்டுகள் 11, பக்கம்:60)

அருப்புக்கோட்டை அருள்மிகு மீனாட்சி சொக்கநாதர் கோயில் கல்வெட்டு. கோயிலின் அர்த்தமண்டப வடக்குச் சுவரில் முதலாம் மாறவர்ம சுந்தரபாண்டிய தேவரின் 15 ஆவது ஆட்சி ஆண்டு கல்வெட்டு உள்ளது. அதாவது கிபி 1230இல் குறள் மாணிச்சுரமுடைய நாயனார் என்று அழைக்கப்பட்ட இக்கோயிலில் இடத்துவளி தட்டான் இரட்டை அழகன் என்பவன் துர்க்கையை எழுந்தருளுவித்தான் என்று இக்கல்வெட்டுக் கூறுகிறது.

### *12. அரச மரபில் கொற்றவை:*

மனித நாகரிகக் காலத்திற்கு முன்பாகத் தொண்டை மண்டலத்தில் எருமையை வணங்கும் மக்கள் இனம் இருந்துள்ளது. அவர்கள் பல்லவர்களுக்கு .முரணாக இருந்திருக்கலாம் அதனால் பல்லவ சிற்பங்களில் கொற்றவையை முன்னிலைப்படுத்தி, எருமைத் தலைமீது நிற்பது மாதிரியாகவோ அல்லது எருமைத் தலை அரசன் 2 கைகளுடனும் கொற்றவைக்கு கூடுதல் கைகளுடனும் காட்டி உள்ளனர். பல்லவர்களுக்குக் கோற்றவை குலதெய்வமாகவும் இருந்துள்ளது. கொற்றவையின் அடுத்த நிலையாக மகிசனைக் கொல்லும் சிற்பம் சொல்லும் செய்தியானது அரக்கன் என்று ஆண்களைச் சித்தரித்தும், ஆண்களைக் கொல்லும் தெய்வமாகக் காட்டவும், ஆண் வழிச் சமூகத்தை சமூகத்தின் மீதான எதிர்ப்பைக் காட்டவும் இவ் உருவ அமைப்பு காட்டப்பட்டுள்ளது. பல்லவர்கள் காலத்தில் மகிசனை கொல்பவளாகப் பல்லவர்கள் காட்டியுள்ளனர்.

***சோழர்கள் காலத்தில் கொற்றவை:***

*முற்காலச் சோழர் காலத்தில் மகிசனின் தலைமேல் நின்று இருப்பது மாதிரியாக காட்டியுள்ளனர். உடன் சங்கு, சக்கரம் ஏந்தியும் சிங்கம் மற்றும் மான் வாகனத்துடனும் காட்டப்படுகின்றது. விஜயாலய சோழர் காலத்தில் நிசம்பு சூதனியாக வணங்கப்படுகிறார்.*

***பாண்டியர்கள் காலத்தில் கொற்றவை:***

*முற்காலப் பாண்டியர்களுக்கு முன்பாகக் கொற்றவையானவள் கிளி, மான் நெடுவாள், வில், அம்பு, கேடயம் என இருந்து வணங்கப்படுகிறாள். முற்காலப் பாண்டியர்கள் காலத்தில் சங்கு, சக்கரம், எருமைத் தலை மீது நின்ற மாதிரியாகவும் மான் மற்றும் சிங்க வாகனத்துடனும் காட்டப்பட்டுள்ளது.*




***13. செட்டிப் புடவு கொற்றவை:***

*கொற்றவை இயக்கியாக மாறிய கதை. சமணத்தில் இயக்கி வடிவம் மலரைப் பிடித்தது மாதிரி இருக்கும். ஆனால் செட்டிப் புடவில் இருக்கும் இயக்கியானவள் 8 கரங்களுடன் ஆயுதங்கள் ஏந்தி சிங்கம் மீது அமர்ந்து எதிரே யானை மீது அமர்ந்துள்ள அரக்கனை எதிர்த்துப் போரிடும் காட்சி போன்று காட்டப்பட்டுள்ளாள். கொல்லாமையைக் கொள்கையாகக் கொண்ட இயக்கி உருவமானது போர்த் தெய்வமாகக் காட்டி இருப்பது கொற்றவையை இயக்கியாக மாற்றும் முயற்சிக்கு ஒரு சிறந்த ஆதாரமாக இச் சிற்பம் எடுத்துக் காட்டுகிறது. (ஆதாரம்- கொற்றவையும் நடுகற்களும், நா. பூங்குன்றன், கோ. சசிகலா, சிந்தன் புக்ஸ் 2019, பக்கம் 75)*

***14. கொற்றவை சிற்ப உருவ விளக்கங்கள்:***

*1.வில், நெடுவாள், கத்தி, கேடயம், முத்தலை சூலம் -போர் தெய்வம்.*

*2.மான்- வளமை, குல குறியீடாகக் கொண்டவர்களை வெற்றியடைந்து பெறப்பட்டது.*

*3.கிளி- குறிஞ்சி நிலத் தலைவியாக வெளிகாட்டுவது.*

*4.சிங்கம், கபாலம்- வட இந்திய மரபுக் கலப்பு.*

*5.மகிஷ வதம் - எருமையைக் குலக்குறியீடாகக் கொண்டவர்களை வெற்றியடைந்து பெறப்பட்டது. தாய் வழிச் சமூக வழிபாட்டை உயர்த்திக் காட்டும் விதமாகவும் இருக்கலாம்.*

*6.தலைபலி- வெற்றிக்குரிய தெய்வமாக இருப்பதைக் காட்டுவதற்காக.*

*7.நெல்/ கரும்பு/வாழை, கொக்கு/நாரை, ஆமை, பல்லி, முதலை- வளமையைக் காட்டுவதற்கு.*

*8.கோயில் வடக்குத் தோட்டம்- கோட்டையை ஆளும் தெய்வமாக இவள் இருப்பதைக் காட்டக் கோயில் கோட்டத்தில் வைத்துள்ளனர்.*

*9.நான்கு, எட்டு கரங்கள்- பெண் சக்தி மிகுந்தவள் என தெரிவிக்கும் விதமாக இவ்வாறு காட்டப்படுகிறார்.*

*10.சங்கு, சக்கரம், முத்தலை சூலம்- சிவ, விஷ்ணுக் கலப்பு.*

***15.கொற்றவை பற்றி மேலதிகத் தகவல்கள்:***

*வேட்டைச் சமூக நிலத் தாய் தெய்வம் மானுடன் இருக்கும். இச்சமுகம் ஆண் தலைமைக்கு மாறிய போது சிவன் கையில் மான் கொண்டு மாறுகிறது. திருமால் வலது மார்பில் இருக்கும் ஸ்ரீ வட்சமும் இப்பெண் தெய்வத்தையே குறிக்கிறது. நவகண்ட தொடர்ச்சியாக இப்பொழுதும் கண், கால், கை என உலோக உடல் உறுப்புகளை நாம் காணிக்கையாகக் கொடுக்கிறோம். தமிழகத்தின் சுடுகாட்டுப் போர் தெய்வமாகக் கொற்றவையும் வழிபட்டதால் வட மரபின் போர் தெய்வமான காளியும் பிற்காலத்தில் இரண்டறக் கலந்து விட்டன. கலிங்கத்துப் பரணி, தக்கையாக பரணியில் காளியே போர்த் தெய்வமாக வணங்கப்படுகிறார். பின் துர்க்கையாக, கோட்டையை ஆள்பவள் என இக்காலத்தில் கோயிலின் வடக்குப் பக்கக் கோட்டத்தில் துர்க்கை வீற்றிருக்கிறாள். ஆண் வழிபாடு உள் நுழையும் போது கொற்றவையை வழிபாடு செய்தவர்கள் எதிர்த்து உள்ளார்கள். அதனால் பெண் தெய்வத்தை உக்கிர தெய்வமாக நான்கு, எட்டு கரங்களுடன் காட்டியுள்ளனர். ஆண் வழிபாட்டின் வெற்றியாக ஊர்த்துவ தாண்டவம்*

காட்டப்பட்டுள்ளது. அதே நேரத்தில் பழையனூர் நீலி கணவனைக் கொல்வது, திருவாலங்காடு இசக்கி, கன்னியாகுமரி தெய்வம், மதுரை மீனாட்சி போன்றவை பெண் தெய்வ வழிபாட்டை இன்றும் நிலை நிறுத்திக் கொண்டிருக்கின்றன. தமிழகத்தில் பெண் தெய்வ, தாய் தெய்வ வழிபாடு இன்றும் அதிக எண்ணிக்கையில் செல்வாக்குடன் காணப்படுவது குறிப்பிடத்தக்கது.




***16.ஆகமம் /சிற்ப சாஸ்திரம்:***

*கிபி எட்டாம் நூற்றாண்டுக்குப் பிறகு இலக்கணம் வகுக்கிறது. அந்தக் காலகட்டத்தில் உருவான கருத்துக்களைக் கொண்டு இலக்கணம் வகுக்கிறார்கள். அதற்கேற்ற மாதிரி உருவமைக்கிறார்கள். ஆகமங்களின் மூலம் துர்க்கையாகப் பெயரைக் கொள்கிறாள். ஆகமங்கள் சிங்கத்தை வாகனமாகக் கூறியுள்ளன. அர்த்த மண்டப வடக்குக் கோட்டத்தில் அமைக்கப்படுகிறாள். ஸ்ரீ காசியப சில்ப சாஸ்திரம், சில்ப ரத்தினம் போன்ற சிற்ப நூல்கள் மூலதுர்க்கை, வனதுர்க்கை என இவளுக்குப் பலவித தியான ஸ்லோகங்களை எடுத்துரைக்கின்றன.*

***முடிவுரை***

*வேட்டைச் சமூகத்தில் வணங்கத் தொடங்கி, ஆதிச்சநல்லூர் சிற்பம் காட்டும் நெல்/ கரும்பு வழியாக இவள் வளமை மிக்க தெய்வமாகி, சங்கக் காலத்தில் வில், நெடுவாள் கொண்டவளாகப் போர்த் தெய்வமாகத் தற்பலி கொடுத்து வணங்கத் தொடங்கி, காப்பியக் காலத்தில் சிலம்பு வழியாக ஆண் தலைமைக்கு மாறும் சமூகமாக சிவனின் மனைவியாகக் காட்டும் முயற்சியாக பிராமணியக் கலப்புடன் மாற்றம் அடைவதைத் தெரிந்து கொள்ள முடிகிறது. வடநாட்டு துர்க்கையின் சின்னங்களுடனும், எருமை சிம்ம வாகனத்துடனும், பிராமணிய மயமாக்கும் முயற்சியையும், போர்க் கருவிகள் இருந்த கைகள் மலர் பிடித்தும் மாற்றம் பெறுகிறது. பல்லவர் காலத்தில் மகிடமர்தினி அதாவது மகிஷா*

*சுரனியாகி, துர்க்கையாகி, கிபி ஒன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்த விஜயாலய சோழனின் குலதெய்வமாகக் கோயில் வழிபாட்டில் இருந்துள்ளாள். பின்பு விஷ்ணு துர்க்கையாகி கலிங்கத்துப் பரணி, தக்கையாகப் பரணியில் கையில் கபாலத்துடன் காளியாகி, ஆண் வழிச் சமூகத்தை எதிர்த்தும், தாய் வழிச் சமூகத்தை நிலை நிறுத்த, கையில் கபாலம், நான்கு, எட்டு கரங்களுடன் மாற்றம் பெறுகிறாள்.*

***கொற்றவையின் இன்றைய நிலை:***

*பெருங்காட்டுக் கொற்றியாக, சுடுகாட்டுப் போர்த் தெய்வமாக, முருகனின் தாயாக, மான் வாகனத்துடன் இருந்த கொற்றவை வடநாட்டுக் களப்பால் காளியாக, கோயில்களில் வடக்குக் கோட்டத்தில் துர்க்கையாக, பிடாரியாக, மகிடமர்த்தினியாக உருமாறி விட்டாள். இருந்தும், இக்காலத்திலும் அதிக அளவு பெண் தெய்வக் கோயில்களே தமிழகத்தில் கிராமத் தெய்வங்களாகவும், குல தெய்வங்களாகவும் வீற்றிருக்கிறார்கள்.*

***18.தரவுகள்:***

*1.தமிழ் இலக்கியத்தில் தாய்த் தெய்வ வழிபாடு, பி.எல் சாமி, 1975, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்.*

*2. தமிழக பாறை ஓவியங்கள், இராசு பவுன் துரை,2001, மெய்யப்பன் ஹவுஸ்*

*தமிழாய்வகம் வெளியீடு.*

*3. தொல்லியல் நோக்கில் தமிழகம், கு. தாமோதரன், 1999, தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை.*

*4.சிலப்பதிகாரம் 5.அகநானூறு 6.சிறுபாணாற்றுப்படை 7.பதிற்றுப் பத்து 8.சங்கத் தமிழர் வழிபாடும் சடங்குகளும் மு. சண்முகம் பிள்ளை, 1996, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்.*

*9.நடுகற்கள் ச. கிருஷ்ணமூர்த்தி, 2004, மெய்யப்பன் பதிப்பகம். 10.கொற்றவையும் நடுகற்களும், ரா.பூங்குன்றன், கோ.சசிகலா, 2019, சிந்தன் புக்ஸ்.*

*11.கல்வெட்டு சொல் அகரமுதலி, சி. கோவிந்தராசன், 1987, மதுரை காமராசர் பல்கலைக்கழகம். 12.மதுரை நடுகற்கள், ப தேவி அறிவு செல்வம், 2022, மதுரை*

*தொல்லியல் ஆய்வு சங்கம். 13.ஆவணம், இதழ் 18, 2007, தமிழக தொல்லியல் கழகம், தஞ்சை.*

*14.ஆவணம், இதழ் 6, 1995, தமிழக தொல்லியல் கழகம், தஞ்சை.*

*15.ஆவணம், இதழ் 10, 1999, தமிழக தொல்லியல் கழகம், தஞ்சை*

*16.சிற்பச் செந்நூல்,வை. கணபதி ஸ்தபதி, 2001, தொழில் நுட்பக் கல்வி இயக்கம்.*

17.Catalogue of the Prehistoric antiquities from Adhichanallur and Perambalur, Alexander Rea, 1915, Archaeological Survey of India.

18.Myth and Reality D.D.Kosambi, 2005, Popular Prakashan, Bombay.

19. Collected Papers, R.Thirumalai, 1994, Department of Arch. Government of Tamilnadu.

20. History of Sakta religion, Narendranath Bhattacharya, 2015, Munshiram Manoharlal, Publishers and Distributors.

21. South Indian Inscription, Volume 14, Archaeological Survey of India, 1962, page 2.

22. The Indian Mother Goddess,N.N.Bhattacharya, 1999, Manohar Publishers and Distributors.

23.The Development of Hindu Iconography,1941, Jitendra nath Banerjea, University of Calcutta.

24. Elements of Hindu Iconography, T.A. Gopinatha Rao, 1914, The Law Printing house.

25. Internet and websites.

# *தமிழ் இலக்கியங்கள் கூறும் வாழ்வியல் சிந்தனைகள்- 9*

# ‘வெல்லும் சொல்’ - விளங்கித் தோன்றும் வெளிகள்



***மு. பழநிச்சாமி***
*நாகமலை, மதுரை-19*
*மின்னஞ்சல் : vmps834@gmail.com*

*“சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை*

*வெல்லுஞ்சொல் இன்மை அறிந்து.”(குறள் 645)*

*நாம் சொல்லும் இந்தச் சொல்லை – இன்னொரு சொல் வெல்லாது என்பதை அறிந்து – அதன் பிறகு சொல்லக் கருதியதைச் சொல்ல வேண்டும்.*

‘Deliver your speech, after assuring yourself that no counter speech can defeat your own.’

*ஒரு சொல் வெல்லும்; ஒரு சொல் கொல்லும் என்பார்கள். வெல்லுகிற சொல் எப்படி இருக்க வேண்டும் என்பதற்கு எடுத்துக் காட்டாக, நம் நாட்டில் வழங்கிவரும் இந்தச் சுவையான பழைங்காலத்துக் கதையைப் படிக்கலாம்; ரசிக்கலாம்; குறளோடு பொருத்திப் பார்த்துப் பயன்கொள்ளலாம்.*

*மன்னருக்கு மீன் கொண்டு வந்தான் ஒரு மீனவன் ‘அரிதான இந்த மீனைத் தாங்கள் வாங்குவது தான் பொருத்தமாக இருக்கும்' என்றான். மன்னரும் மகிழ்ந்து அவனுக்கு ஐயாயிரம் பொற்காசுகள் அளித்து மீனைப் பெற்றுக்கொண்டார்.*

*இதைப் பார்த்த அரசி 'அய்யோ ஒரு அற்ப மீனுக்கு இவ்வளவு பணமா? திரும்ப வாங்குங்கள்" என்று ஆத்திரப்பட்டாள். .*

*'முடிந்த வியாபாரத்தை மாற்றுவது அழகல்ல' என்று மன்னர் மறுத்தார். ‘சரி, அவனைக் கூப்பிட்டு இந்த மீன் ஆணா பெண்ணா என்று கேளுங்கள்; ஆண் மீன் என்று அவன் சொன்னால் - பெண் மீன்தான் வேண்டும் என்றும்; பெண் மீன் என்று சொன்னால் ஆண் மீன் தான் வேண்டும் என்றும் கேளுங்கள்.*

*எப்படியும் அவனிடமிருந்து பொற்காசுகளைப் பிடுங்கி ஆக வேண்டும்' என்றார் அரசி.*

*மீனவன் திருப்பி அழைக்கபட்டான். கேள்விக் கணையை மகாராணி தொடுத்தார். அவன் உஷாராகப் பதில் சொன்னான் 'இது ஆணுமில்லை பெண்ணுமில்லை'*

இரண்டின் குணங்களையும் கொண்ட அதிசய மீன். அதனால் தான் அதை மன்னருக்குக் கொண்டு வந்தேன் என்றான்.

இந்த பதிலால் நெகிழ்ந்த மன்னர் மேலும் ஐயாயிரம் பொற்காசுகளை மீனவனுக்கு அளித்தார். அதிலிருந்து ஒரு காசு தரையில்விழுந்து ஓடியது. மீனவன் அதைத் தேடி எடுத்தான். மகாராணி ஆத்திரமும், ஆதங்கமுமாக, 'பேராசைக்காரன்.! கீழே விழுந்த காசை யாராவது வேலைக்காரர்கள் எடுத்துப் போகட்டுமே என்று விட்டானா பாருங்கள்' என்றாள் மன்னரிடம்.



மீனவன் நிதானமாக, நான் பேராசையில் அதை எடுக்கவில்லை மகாராணி! அந்த நாணயத்தில் மன்னரின் உருவம் பொறித்து இருக்கிறது. யாராவது தெரியாமல் அதை மிதித்தால் கூட என்னால் தாங்கிக்கொள்ளவே முடியாது' என்றான்.

இதனால் மேலும் நெகிழ்ந்த மன்னர் மேலும் ஐயாயிரம் பொற்காசுகளை அவனுக்குக் கொடுத்தார். இப்பொழுது மகாராணி, திகைத்துப் போய் நின்றார்.

இந்த மீனவன் எந்தப் பல்கலைக் கழகத்திலும் படித்து முனைவர் பட்டம் பெற்றவனல்ல. இயல்பாகத் தனக்கு வாய்த்த திறமையைக் கொண்டும், உலகம் என்னும் பரந்த பல்கலைக் கழகத்தில், தான் பெற்ற பட்டறிவைக் கொண்டும், ''வெல்லும் சொல்லறிந்து'' இப்படித்தான் பேச வேண்டுமென்று உலகிற்குக் கற்றுத் தந்த பேராசிரியப் பெருந்தகைதான் , இந்த மீனவ நண்பன்.

வெளியுறவுத்துறை அமைச்சர்களும், தூதுவர்களும், இந்தக் குறளையும், மீனவ நண்பனையும், தங்களது ஆசானாக நெஞ்சில் நிறுத்திக் கொள்ள வேண்டும்.

இது இருக்க, வாழ்வில் நான் சந்தித்துக் கண்ட , இவ்வாறான நான்கு நிகழ்வுகளை இங்கு நினைவு கூர்கிறேன். இது கற்பனை அல்ல; வாழ்வில் நிகழ்ந்தவை.

***நிகழ்வு-I***

பஸ்ஸில், மதுரை பெரியார் பேருந்து நிலையத்திற்கு வந்து இறங்கினேன். அங்கிருந்து மீனாட்சி அம்மன் கோயில் செல்ல, ஆட்டோ பிடித்தால் அதிக வாடகை கேட்பாரே என்று எண்ணி, சைக்கிள் ரிக்ஷா ஒன்றைத் தேடினேன். ரிக்ஷாவுடன் அகப்பட்டார் ஒரு பெரியவர். மீனாட்சி அம்மன் கோயில் செல்ல

*எவ்வளவு? என்றேன். முப்பத்தைந்து ரூபாய் என்றார். ஆட்டோக்காரரே முப்பத்தைந்து ரூபாய்க்கு வரும்பொழுது, நீ இப்படிக் கேட்கிறாயே என்றேன். அதற்கு அவர் சொல்லிய பதில், என் நெஞ்சைத் துளைத்து, வேதனை வளையத்தை உள்ளே செலுத்திவிட்டது.*

*''ஐயா – அது பெட்ரோலில் ஓடுவது; இது மனித ஆவியில் ஓடுவது'' என்றார்.*



*இந்த வெல்லும் சொல்லை எதிர்கொண்டு எதுவும் பேசமுடியாமல், தலை குனிந்து வண்டியில் ஏறி அமர்ந்து கொண்ட என்னை, கோயில் வாயிலுக்கு வெகு அருகாமையில் கொண்டுவந்து நிறுத்தி, கட்டியிருந்த வேட்டியை இழுத்து, ஒழுகிவந்த வியர்வையைத் துடைத்து, மூச்சிறைக்க இழுத்து ஓட்டிவந்த களைப்பை ஆசுவாசப்படுத்தி நின்றார். வண்டியை விட்டு இறங்கிய நான், பேசிய ரூபாய்க்கு மேலும் ஒரு பத்து ரூபாயைச் சேர்த்து அவரிடம் தந்தேன்.*

*பணத்தை வாங்கிக்கொண்டு என்னை ஏற இறங்கப் பார்த்த அவர், அதிகப்படியாக இருந்த பத்து ரூபாயை என்னிடம் நீட்டினார்.*

*'ஆட்டோ டிரைவர், மூச்சுப்பிடித்து உன்னி இழுத்து வேர்த்து விறுவிறுத்து ஓட்டுவதில்லை; மனித ஆவியில் ஓட்டி வந்த உன் நிலையை உணர்ந்தேன்; அதனால் இந்தப் பத்து ரூபாய் உனக்கு' – என்று சொல்லித் தன்படியே நடந்தேன்.*

*'அது, பெட்ரோலில் ஓடுவது; இது, மனித ஆவியில் ஓடுவது' – என்று விரக்தியும் வேதனையும் சேர்ந்து, சொற்செட்டுடன் வெளிவந்த அவரது வெல்லும் சொல்லில், வெறும் ரிக்ஷாக்காரராக அவரை நான் காணவில்லை. உழைப்பின்*

*உன்னதத்தை அளந்தறியத் தெரியாத மாந்தர்க்கு, உழைப்பின் உயர்வை உலகிற்கு உணர்த்திய கார்ல் மார்க்சாகத்தான் அவரைக் கண்ணெடுத்துப் பார்க்க முடிந்தது.*

*வள்ளுவரின் வெல்லும் சொல், சற்றும் படித்தறியாத அந்தத் தொழிலாளியின் நெஞ்சோடும் நாவோடும் புரண்டு வெளிவந்த புத்தமுதாகப் பொங்கி வழிந்ததை எண்ணி என் இதயம் படபடத்தது; ஆழ்ந்த சிந்தனைக்கு ஆட்படுத்தியது.*

*வள்ளுவம், என்றென்றும், எங்கெங்கும், வாழும் வாழும் வள்ளுவமாக, வளர்ந்துகொண்டும் ஒளிர்ந்துகொண்டும் வரும் வெளிகளில் இதுவும் ஒன்றாக அமைந்து திகழ்வதை , என்னுள் காணமுடிந்தது.*

***நிகழ்வு-II***

*இரண்டாவதாக நாம் பார்க்க இருப்பது, பழக்கடை. மதுரையை அடுத்த மேலூர். அந்த ஊரில் 'செக்கடி' என்று சொல்லக்கூடிய விசாலமான முச்சந்தி. (*Down Town). *சிவகங்கை, மதுரை, திருச்சி, திருவாதவூர், மற்றும் அழகர் கோயில் சாலைகள் சங்கமிக்கும் இடம். எந்நேரமும் மக்கள் நடமாட்டம் மிகுந்து, உயிர்ப்புடன் திகழும் ஊர்ப் பொது வெளி. அதைச் சுற்றிலும் பல்வேறு கடைகள். அதில் ஒரு பழக்கடை. அநேகமாக அனைத்துப் பழங்களும் அந்தக் கடையில் கிடைக்கும்.*

*சற்றேறக்குறைய நாற்பது ஆண்டுகளுக்கு முன், அந்தக் கடையில் பழம் வாங்க நேர்ந்தது. நன்றாக உருண்டு திரண்டு கனிந்து பக்குவப்பட்ட, அறுபது எழுபது பழங்களைக் கொண்ட செவ்வாழைத்தார், அது. கைவைத்த பனியனும் வேட்டியும் அணிந்து, 45-50 வயது மதிக்கத் தக்க, அந்தக் கடைக்காரரிடம் விலையைக் கேட்டேன். பழம் ஒன்றின் விலை ஒரு ரூபாய் என்றார். (அந்தக் காலத்தில் ஒரு ரூபாய் என்பது மதிப்பு மிக்கது)*

*அந்தத் தாரிலுள்ள பழங்கள் அனைத்தையும் அன்றே விற்றுத் தீர்த்தால்தான் அவருக்குக் கட்டுபடியாகும். அடுத்த நாள்வரை அது தாங்காது. கனிந்து குழைந்து பயனற்றுப் போய்விடும். இப்படியுள்ள நிலையில் 50 பைசா என்று விலை வைத்தால் விற்றுத் தீர்ந்துவிடும்; இப்படி வாங்க வந்தவரை விரட்டியடிக்கும் வகையில் விலை சொல்கிறாரே என உள்ளூர நினைத்துக்கொண்டே , 'ஐம்பது பைசாவுக்குத் தரலாம் அல்லவா?; இவ்வளவும் இன்று விலையாகாவிட்டால் அழுகித்தானே போய்விடும்; தூக்கித் தூர எறியத்தானே வேண்டி வரும்' - என்றேன்.*

*அதற்கு அவர் சொன்ன பதில் என்னுள் அதிர்ச்சியையும் அதிர்வலைகளையும் தோற்றுவித்து ஆழ்ந்து சிந்திக்கும்படி செய்துவிட்டது.*

*‘மனிதனையே, இன்றைக்குச் செத்தால் நாளைக்குத் தூக்கிச் சென்று தூரப் போட்டு விடுகிறோம்; இந்தப் பயனற்றுப்போன பழங்களைத் தூக்கித் தூரப் போடுவதால் என்ன ஆய்விடப்போகிறது’ – என்றார்.*



*வெல்லும் சொல்லாக, அவர் வாயிலிருந்து வெளிவந்த பேச்சுக்கு, மறு பேச்சாக என்னால் ஏதும் பேசமுடியவில்லை. பேசாமல் அவர் சொன்ன விலைக்குப் பழங்களை வாங்கிக்கொண்டு, அவரைப் பார்த்தேன். அவர் ஒரு சாதாரணக் கடைக்காரராக என் கண்களுக்குப் படவில்லை. நிலையாமைக் கோட்பாட்டை , என்றும் நின்று நிலைக்கும்படி சொல்லிச் சென்ற பட்டினத்தடிகளாக, பாடம் போதிக்கும் ஞானியாக, அவர் என்னுள் உயர்ந்து நின்றார்.*

*வெல்லும் சொல் பற்றிய வள்ளுவரின் வாய்மொழி, போகிற போக்கில், பழக்கடைக்காரரின் வாய்மொழியாகப் பரிணமித்து வந்த விதத்தை எண்ணி வியந்தேன். வள்ளுவம் , வாழும் வெளிகளில், இதுவும் ஒன்று போலும் என, என் மனசுக்குள் பேசிய குரல் ஒன்று மெல்ல ஒலித்தது.*

***நிகழ்வு-III***

*மூன்றாவதாக நம் முன் நிற்பவர் உசிலம்பட்டிக் கருத்தம்மா. களைகட்டி நிற்கும் உசிலம்பட்டி வாரச் சந்தை. பல்வேறு காய்கறிகளுடன், பச்சை மொச்சையும், பச்சை நிலக்கடலையும் , ஏகத்துக்கு விற்பனையாகும் இடம். கண்டாங்கிச் சேலையும், காதில் தண்டட்டியும், வாயில் புகையிலை சேர்ந்த*

*வெற்றிலையுமாய், ஈடுசோடான உடல்வாகுடன், நடுத்தர வயதியற்கும் , மூதாட்டிக்கும் இடைப்பட்ட தோற்றத்தோடு, குவித்து வைத்துள்ள பச்சைக் கடலையுடன், மொச்சையைப் பரப்பிவைத்து, அதன்முன் அமர்ந்து விற்பனை செய்யும் வியாபாரிதான் அந்தக் கருத்தம்மா.*

*சந்தைக்குச் சென்ற நான் , மொச்சை வாங்க விலை கேட்ட பொழுது, கருத்தம்மா சொன்ன விலை, கட்டுபடியாகாத விலையாக, சற்றுத் தூக்கலாகத் தெரிந்தது. பச்சை மொச்சைக்கு, இப்படிப் பவுன் மாதிரி விலை சொன்னால் எப்படி வாங்குவது? என்றேன். அதற்கு, கோபச் சொற்களை கொண்டுவந்து கொட்டி விரட்டாமல், அன்பு ததும்பும் தொனியில் 'ஆத்தே, நாங்க ஆத்துத் தண்ணிமேல மெதக்குற தோணி மாதிரி; வெள்ளம் வந்தா, தோணி, மேல ஏர்ர மாதிரி - வெல ஏறும்; வெள்ளம் வடிஞ்சா, தோணி கீழ எறங்குர மாதிரி வெல எறங்கும்; இதுல எங்களைக் குத்தஞ் சொல்றதுல என்ன நாயம்?' சொற்கள் இப்படி வெளி வந்தன , கருத்தம்மாவின் வாயிலிருந்து.*

*இதுவரை என் கண்களுக்கு, சாதாரணமாகத் தென்பட்ட அந்தக் கருத்தம்மா, வணிகவியலின் சாராம்சத்தையே, சாறு பிழிந்து சொல்லித் தந்த பேராசிரியையாக, என்னுள் இமயம்போல் உயர்ந்து நின்றார்.*

*பள்ளி சென்று படித்தறியாத கருத்தம்மாவின் வெல்லும் சொல்லாக விளங்கி வெளிவந்த அந்த நியாயமான பேச்சுக்குப் பட்டிமன்றப் பேச்சாளி போல , அநியாயமாக யோசித்து, நியாயம் போல என்னால் எந்தப் பதிலும் சொல்ல இயலவில்லை.*

*மாறாக, உசிலம்பட்டி வாரச் சந்தை வெளிகளிலும் வள்ளுவரின் வெல்லும் சொல், வாழும் சான்றாய் நின்று, உயிர்ப்புடன் உலா வருவதைக் கண்டு இன்புற முடிந்தது.*

***நிகழ்வு-IV***

*நான்காவதாக நம் முன் நிற்பது நர்சரி கார்டன். மதுரையின் மையப்பகுதியாகச் சொல்லத்தக்க முக்கியமான இடம், விக்ட்டோரியா எட்வர்ட்ஹால். விக்ட்டோரியா அரசியின் மதுரை வருகையையொட்டி 1902-ல் பிரிட்டிஷ் நிர்வாகத்தினரால் நிர்மாணிக்கப்பட்டது, அது. நல்ல நூலகத்துடன், திறந்த வெளி அரங்கமும், திரை அரங்கமும் , கூடிய வளாகம், அது.*

*அந்த வளாகத்தில் நர்சரி கார்டன் ஒன்று. அங்கு குரோட்டன்ஸ் செடிகளும், விதவிதமான பூச்செடிகளும்,கண்ணைக் கவரும் வண்ணம் அலங்காரமாக விற்பனைக்கு அடுக்கி வைக்கப்பட்டிருக்கும். சற்றேறக்குறைய முப்பது ஆண்டுகளுக்கு முன், நல்லதொரு அலங்காரச் செடி வாங்க அங்குச் சென்றேன்.*

பல்வேறு செடிகளில் கண்ணோட்டம் விட்டபின் - சின்னஞ்சிறு தொட்டியில் வைத்து வளர்க்கப்பட்டிருந்த வனப்புமிக்க ஒரு செடியைக் குறிவைத்து, அதன் விலைபற்றி வினவினேன். அதன் விலை ஐம்பது ரூபாய் என்றார். எனக்கு என்னமோ, அதன் விலை சற்றுக் கூடுதலாகத் தெரிந்தது. குறைத்துத் தர இயலுமா? எனக் கேட்டேன், அதற்கு அவர், 'இந்த அற்புதமான செடியை, மூன்று ஆண்டுகளாக, அதாவது ஆயிரம் நாட்களாகப் பராமரித்துப் பாதுகாத்து வருகிறேன். நாளொன்றுக்கு, அற்பத் தொகையாக ஒரு ஐந்து காசு கூட எனக்குக் கிடைக்க வேண்டாமா?' - என்றார்.

வெல்லும் சொல்லாக வெளிவந்த, இயல்பான அவரது இந்தப் பேச்சிலுள்ள நியாயம் என்னைச் சிந்திக்க வைத்தது.

விலை போட்டு வாங்கிய விதை, விலைபோட்டு வாங்கிய மண், விலை போட்டு வாங்கிய தொட்டி, நாளொன்றுக்கு ஒரு லிட்டர் தண்ணீர் வீதம், விலை கொடுத்து வாங்கிய ஆயிரம் லிட்டர் தண்ணீர், ஆயிரம் நாள் பராமரிப்பு, என்று இப்படியெல்லாம் விரிவாகச் சொல்லாமல், 'சொல்லின் சுருக்கம் என்பது அறிவின் பெருக்கம்' என்பதை நினைவூட்டும் வகையில், நாளொன்றுக்கு, அற்பத் தொகையாக ஒரு ஐந்து காசு கூட எனக்குக் கிடைக்க வேண்டாமா?' என்று பேசிய பேச்சைத் தலை வணங்கி ஏற்பதைத் தவிர வேறொன்றும் பேசத் தோன்றவில்லை.

அவர், போட்டுச் சொன்ன பொருளாதாரக் கணக்கின் மூலம், அவரை, செடி வளர்க்கும் - சாதாரணமான ஒரு தோட்டக்காரராகப் பார்க்க முடியவில்லை. பொருளாதார மேதை, ஆடம்ஸ்மித்தாக அவர் என் கண்களுக்குத் தோன்றினார்.

எல்லாவற்றிற்கும் மேலாக , வள்ளுவரின் வெல்லும் சொல், வாழும் சாட்சியாய், நர்சரி கார்டன் வெளியிலும் நின்று நடம் பயிலும் விந்தையை எண்ணி வியந்தேன்.

இறுதியாக ஒன்று.

சொல்லின் செல்வனாகச் சித்தரிக்கப்படும் அனுமனின் வெல்லும் சொல், நீதியை நிலை நாட்ட வழக்குரைத்து, அரசை வீழ்த்திய கண்ணகியின் கூரிய சீரிய வெல்லும்சொல், 'நான் சீசரைப் புதைக்க வந்திருக்கிறேன்; புகழ்வதற்காக அல்ல' –என்றுதொடங்கி, வெறிகொண்ட அந்த மக்கள் திரளை, எதிரிகளை நோக்கி ஏவிவிட்ட அன்ட்டோனியின் அற்புதமான வெல்லும் சொற்கோவை- போன்ற இலக்கிய ஏற்றம் பெற்றவைகளையெல்லாம் இங்குக் கொண்டு வந்து சேர்க்காமல், அன்றாட வாழ்வில், சாமானிய மக்கள் வாயிலிருந்து, முத்துச் சுடரொளி போல் மின்னி வெளிவந்த வெல்லும் சொல் பற்றியே இங்குச் சொல்லியுள்ளேன்.

# எம்.ஜி.ஆர் தத்துவப் பாடல்களில் தன்னம்பிக்கைக் கருத்துக்கள்.

***(எம் ஜி ஆர் திரைப்பட பாடல்கள் நுண் ஆய்விருக்கையின் மெய்நிகர் உரை)***

***—இரவி சொக்கலிங்கம்***

*தலைவரின் பாடல்கள் பொழுது போக்கிற்காக மட்டும் இல்லாமல் நல்ல விடயங்களை மக்களுக்குக் கொண்டு சேர்க்க வேண்டும் என்ற தீர்க்கமான தொலைநோக்குப் பார்வையுடன், தான் மனதில் நினைத்த சிந்தனைகளைப் பாடல் ஆசிரியர் /இயக்குநர்களுடன் பகிர்ந்து, காலத்தால் மறக்க முடியாத பாடல்களை உருவாக்கினார்.*

*உலக அறிஞர்களின் மேலான கருத்துகளை எளிமையாக, கிராமத்தில் திரைப்படம் பார்க்கும் ரசிகனுக்கும் கொண்டுபோய்ச் சேர்க்கும் விதமாகப் பாடல்களை அமைத்து அதை ரசனையுடன் காட்சிப்படுத்தினார்.*

*1960, 70களில் உருவான படங்களில் உள்ள எம்ஜிஆரின் பாடல்கள் 60 வருடங்கள் கடந்து, இப்போது கேட்டாலும் உற்சாகம், துள்ளல், கொண்டாட்டம் மற்றும் புத்துணர்ச்சியை வழங்குவதோடு, தயக்கம், தாழ்வு மனப்பான்மை நீங்கி சமூகத்திற்கு நம்பிக்கை தரும் வரிகளாக அமைந்துள்ளன. அந்தக் காலத்தில் திரைப்படம் ஒன்றே மக்களின் ஆகச்சிறந்த பொழுது போக்காக இருந்தது. வீட்டிற்கு உறவினர்கள் /விருந்தினர்கள் வரும்போது அவர்களைத் திரைப்படத்துக்கு அழைத்துச் செல்வது ஒரு சடங்காகவே இருந்தது. இப்படிக் குடும்பத்தில் எல்லோரும் ரசிக்கும் விதமாக, நல்ல கருத்துக்களை என்றென்றும் நினைவில் வைத்துக் கொள்ளக்கூடிய அனுபவமாக எம்ஜிஆரின் பாடல்கள் இருக்கின்றன.*

*தன்னம்பிக்கைக் கருத்துகளை இனிப்பு தடவிய மருந்தாக மக்களுக்கு அளித்து, நம்பிக்கையை விதைத்து தலைமுறைகளைத் தாண்டி இன்றளவும் ஊக்கமளிக்கிறது. அவற்றில் சில,*

*1.அதோ அந்தப் பறவை போல வாழ வேண்டும் .*

*2.உன்னை அறிந்தால் நீ உன்னை அறிந்தால்.*

*3.நான் யார் நான் யார் நீ யார் .*

***1.அதோ அந்தப் பறவை போல வாழ வேண்டும்.***




*நாயகன் தலைமையில் இயங்கும் ஒரு கூட்டம் தங்கள் விடுதலையை நினைத்து ஆரவாரத்துடன், உற்சாகத்துடன், கொண்டாட்டத்துடன் மகிழ்ச்சியை வெளிப்படுத்தும் பாடலாக அமைந்தது. கப்பலில் ஆடல் பாடலுடன் சிறப்பாகப் படமாக்கப்பட்டு எம்ஜிஆரின் துள்ளலான நடிப்புடன், அழகான உடை அலங்காரத்துடன் ஜெயலலிதாவுடன் இணைந்து தேவ குமாரனாகவும், தேவ குமாரியாகவும் தோன்றிய அவர்களின் ஜோடிப் பொருத்தம் ரசிகர்களைக் கிறங்கடித்தது.*

*2.**உன்னை அறிந்தால் நீ உன்னை அறிந்தால்**.*



*தலைவரின் அட்டகாசமான 'கௌபாய்' (cowboy) உடையில் பாடும் தன்னம்பிக்கை வரிகள் சிறப்பாக அமைந்த பாடல். குதிரையில் உற்சாகத்துடன் நாயகியுடன் அமைந்த பாடல் காட்சி கண்ணுக்கும் காதுக்கும் விருந்தாக அமைந்தது .*

***3.நான் யார் நான் யார் நீ யார்?*** *எனத் தொடங்கும் குடியிருந் கோயில் படப் பாடல்*

*எம்ஜிஆர் மனநிலை பிறழ்ந்த, தான் யார் என்பதே தெரியாத நிலைக்கு ஆளான போது தன்னை அறியும் தவிப்புடன் நடிக்கும் காட்சியில் இடம் பெற்ற பாடல். இது அற்புதமான ஆழ்ந்த பொருட் சுவையை "யார்" என்ற சொல் திரும்ப திரும்ப வரும் வகையில் அமைத்து வளமையான சொற்களாலும் எம்ஜிஆரின் இயல்பான நடிப்பாலும் ரசிகர்களின் மனதை விட்டு அகலாத பாடல் . தலைவருக்குப் புலவர் புலமைப்பித்தன் எழுதிய முதல் பாடல். நாயகன் பித்தனாக நடித்த பாடல் ...பித்தன் பித்தனுக்கு எழுதிய பாடல். இவ்வகையில் இப்பாடலும் நினைவில் நிற்கும் பாடலாக விளங்குகிறது*



***சென்னை- புதுவை வானொலிகளில் ஆற்றிய உரை - 1***

# வாணிதாசன் கவிதை மாட்சி

***ஆனைவாரியார் முனைவர் ஆனந்தன்***

*சேத்தியாத்தோப்பு தமிழ் சங்க நிறுவனர் – தலைவர்*



## ***இயற்கை பூரிப்பு***

*உலகியலில், மனித வாழ்க்கையோடு பின்னிப் பிணைந்து ஒட்டி உறவாடும் சூழல் - இயற்கைக் காட்சிகள், மற்றவர்களைவிட கவிஞர்களைச் சற்று அதிகமாகவே பாதிக்கின்றன.*

*அன்று தொட்டு இன்று வரை, அகில உலகிலும் மேலை நாட்டுக் கவிஞர்களாயினும் கீழை நாட்டுக் கவிஞர்களாயினும், எவருமே இயற்கையைப் புறக்கணித்து, சூழலை ஒதுக்கிவிட்டு எழுத முயன்றதே இல்லை... அது முடியவும் முடியாது. அப்படிப்பட்ட ஒரு படைப்பு உயிர்;ப்புடைதாகவும் அமையாது.*

*சொல்லப் போனால் இயற்கை எழிலுக்கு இலக்கிய உருவம் கொடுத்து, ஏட்டிலே வாழவைத்து வாடாமல் மக்கள் மனங்களிலே உலாவரச் செய்து நமது அன்றாட வாழ்க்கை நிகழ்ச்சிகளோடு, இயற்கை நிகழ்வுகளை ஒப்பிட்டுப் பார்க்க வைப்பவர்கள், கவிஞர்கள்தாம்!*

*ஆம்! இயற்கையை எழுத்தில் வடித்து வடித்து இலக்கிய வடிவம் தந்துவிட்டுச் சென்ற*

*N~க்ஸ் பியர் மில்ட்டன் n~ல்லி*

*கீட்சுடன் வேட்சு வொர்த்தும்*

*சேக்கிழார் தாகூர் கம்பன்*

*வள்ளுவன் இளங்கோ சாத்தன்*

*டென்னிஸன் தாம்ஸன் கூத்தன்*

*பாரதி பைரன்... இன்னும்*

*எண்ணிலாப் புலவர்களோடு தொடருகின்ற கவிஞர் பரம்பரையில், பாரதிதாசனின் அடிச்சுவட்டைப் பின்பற்றி வருகிறார், கவிஞர் அரங்கசாமி!*

*ஆம்! அரங்கசாமி... அவர்தான் புதுவைக் கவிஞர் வாணிதாசன்!*

*காளிதாசன், பாரதிதாசன், கண்ணதாசன் என்று "தாசன்"; பெயர்கொள்ளும் வரிசையில், கலைமகளுக்குத் தாசனாக வரும், இந்த வாணிதாசனின் கவிதையிலே இயற்கை பூரிக்கிறது, தமிழன்னை பூரிக்கிறள்! அவரைப் பாராட்டி மகிழ்வதிலே வானொலி பூரிக்கிறது... நானும் பூரிக்கிறேன்!*

*அன்றாடம் காணப்படும், மிகச் சாதாரணமான இயற்கை நிகழ்வுகள் கவிஞனின் கண்களுக்கு அசாதாரணமாக, அதியற்புதமாகக் காட்சியளிப்பது ஒரு மாறுபட்ட நோக்கமாகும்.*

*ஆம்,*

*இயற்கையில் பிறக்கும் இன்னிசைக் குரலும்*

*குருவியும் புறவும் கூவிடும் குயிலும்*

*பறந்திடு கிளியும் பாய்ந்திடு மீனும்*

*மிதந்திடு முகிலும் மீனும் கோளும்*

*தவழ்ந்திடு தென்றலும் தளிரிலைப் பயிரும்*

*அலர்ந்திடு மலர்கள் அளித்திடு மணமும்*

*அந்திவானழகும் சந்தன வண்ணமும்*

*சுந்தர நீலமும் சுடர்நிலாத் தோற்றமும்..(ஆ.ஆ)*

*கவிஞர்களின் மனத்திரைக்குள் நுழைந்து மாயாஜாலங்கள் காட்டுவது ஒருதலை!*

*அதோ, இளம்பரிதி தோன்றக் கண்டு வாணிதாசன் பாடுகின்றான்! சூரியன் தலைநிமிரக் கண்டு இருள் ஓடும் காட்சி!*

*"கடற்பரப்பில் - உப்பங் - கழிப்பரப்பில் - தாழை*

*மடற்பரப்பில் - நெய்தல் - மணற்பரப்பில் - சாய்ந்த*

*முடப்புன்னைப் பைங்கிளையில்*

*முண்டகப் பூங்காட்டில்*

*அடங்கியிருந்த விருள்*

*அற்றொழியக் கீழ்க்கடல் மேல்*

*தங்கப்பரிதி தலைநிமிர்ந்தான்!"*

*சூரியன் உதித்த பின்னே..சூழலில் நிகழ்வதென்ன..?*

*ஒளிவெள்ளம் கண்டு*

*உவக்கின்றான் தமிழ்க் கவிஞன்!*

*அதோ!*

*"வானில் மலையில் மரக்காவில் பூம்புதரில்*

*போன ஒளி அடடா!*

*பொன்வெள்ளம்! பொன்வெள்ளம்!"*

*என்று பூரிக்கின்றான் !*

*ஆதவன் தோன்றும் காட்சி*

*அன்றாடம் தான் என்றாலும்*

*அகத்தினில் படம் பிடிக்கும்*

*அவன்கவிப் பாங்கு என்னே!*

*அடுத்து, மூடுபனிக் காலம் முகந்தெரியா பனிப்புகையில் வாடும் உயிரினங்கள்...! கண்டு வாணிதாசன் பாடுகிறான்:*

*" தோப்பும் துரவும்*

*விழிப்புலனுக் கெட்டாது*

*காப்புத் திரையிட்டு*

*வைத்தது போல் மூடுபனி!*

*கண்ணுக்கு நீண்ட மட்டும்*

*காணும் பனிப்புகையே!*

*ஊதை உடல் நடுக்கம்*

*ஊரெல்லாம் தீக்காயும்"*

*என்று பனிக்காலக் காட்சியினைப் பளிச்சென்று காட்டுகின்றான்! அடுத்து, வருவதோ கார்காலம்! கார்காலக் காட்சியினைக் கவிதையில் வடிக்கும் மாட்சி!*

*மேகங்கள் ஓட்டமிட*

*மின்னல் வந்து நெளிந்தோட*

*இடிமுழக்கம் செவியதிர.... அவன்காட்டும் காட்சியது!*

*வானத்து மேகங்கள்,*

*''யானை தலைதெறிக்க ஓடும் தகைமைபோல்*

*அங்குமிங்கும் ஓடும் அதிரும் முழவார்க்கும்*

*சிங்கத் தமிழர் செருக்களத்து ஓசையென*

*வானம் இடிக்கும் மழை பொழியும் நீள்மூசைத்*

*தங்க உருக்குபாய்த் தாரைகளைப் போல் மின்னல்*

*கண்ணைப் பறிக்கும் கருத்தழிக்கும் காற்றிரைச்சல்*

*நீண்டபனை தென்னை நிலைகள் தெரியாமல்*

*மூண்டெழுந்த காற்றுடனே ஆடும் முறிந்தொடியும்||*



*எனக் காட்டும் கார்காட்சி முடிய, கார்கால மழை பொழிய, பொங்கிவரும் புதுமகள், இன்பமகள் காவிரியை எழிற் காவில் படம் பிடித்து 'இதோ' என்று காட்டுகின்றான்!*

*'' வான்தாவும் தெங்கிடையில்*

*வாழைமரம் தாவும்*

*வயல்பூத்த செங்கரும்பின்*

*அயல் பூக்கும் செந்நெல்!*

தேன்தாவும் வண்டோடு

செடிதாவும்! தோப்பெங்கும்

பூங்கொடிகள் தாவும்!

மான்தாவும் நீள் மாட

முன்றில்லம் தோறும்

மயில்தாவும் மங்கையரின்

மணிக்குரலைக் காட்டி

கான் தாவும் கருங்குயில்கள்

கரைதாவும் வற்றாக் காவிரி!||



என்று காவிரியின் சிறப்பை வாணிதாசன் பாடுகின்ற பொழுது, அங்கே இன்னொரு குரலும் எதிரொலிக்கிறது!

ஆம்! கண்ணதாசன் பாடுகின்றான்!

“ பட்டுப்போல் நெல்விளையும்

பாடிவரும் காவேரி

சிட்டுப் போல் மாதரையும்

சேர்த்தணைத்துக் கைகலக்கும்

கொட்டும் முரசங்கள்

கோபுரங்கள் ஆலயங்கள்

எட்டெட்டுத் திக்கும்

இசைபாடும் சோழகுலம்

கட்டிக் கிடந்த நிலம்

கால்பாவி நடந்த நிலம்

வட்டென்ற பூந்தனங்கள்

வாய்த்த இளங் கன்னியரும்

கட்டான மேனியொடும்

களம் போந்து உயர்ந்த நிலம்

பட்டாளத் தஞ்சை!

எனப்பாடும் கண்ணதாசனின் குரல் - காவிரியை – தஞ்சை மண்ணைப் பாடும் கீதமும் இங்கே கேட்கத்தான் செய்கிறது!

இயற்கையை இயற்கைக்காக மட்டுமே பாடுவது மேல் நாட்டார் மரபு. ஆனால் நம் தமிழ்க்கவிஞர்களோ இயற்கையைத் தம் வாழ்வியலோடு ஒட்டியே பாடல்களைச் செய்துள்ளனர். சங்ககாலந் தொட்டே, இயற்கையோடியைந்த வாழ்வில் திளைத்த வர்கள் தமிழ் மக்கள்.

தமிழகத்தின் இயற்கை வடிவமைப்பை, நானிலமாக – ஆக்கி, மாயோன் மேய காடுறையுலகமும்

சேயோன் மேய மைவரையுலகமும்

வேந்தன் மேய தீம்புனல் உலகமும்

வருணன் மேய பெருமணல் உலகமும் “

என்று அமைத்து, அந்நிலங்களுக்கேற்ப முதல், கரு, உரிப்பொருட்களைப் பகுத்து இயற்கைச் செல்வங்களை, வாழ்க்கை முறைகளுக்கேற்ப அமைத்துச் சிறந்த இனம் தமிழினம்!

அந்த மரபிலே தான், வாணிதாசன் பாடுகின்றான்! தில்லை நகாச் சிறப்புதனைக் கூறும்போது தித்திக்கும் தமிழ்ச் சொல்லை அடுக்குகின்றான்!

விண்தாவும் நீள் தென்னை விரிந்தபாளை

வெண்குருகென்றே சேல்கள் நீரில் தாவும்!

மண்தாவும் நெற்கதிர்கள் பழுத்த வாழை

மரந்தாவும் சோலையிலே பாடும் வண்டு

பனிமலரின் மேல்தாவும் காணும் மக்கள்

கண்தாவும் மணிமாடத் தில்லை''

என்று பாடி,

மருதநிலம் சூழ்ந்த எழில் தில்லைக் காட்சி

மகிழ்கின்றாள், மணக்கின்றாள், இயற்கை மாட்சி! அடுத்து,

''வான்தோன்றி வளிதோன்றி நெருப்புத் தோன்றி

மண்தோன்றி மழை தோன்றி மலைகள் தோன்றி

ஊன் தோன்றி உயிர்தோன்றி உணர்வு தோன்றி

ஒளிதோன்றி ஒலிதோன்றி வாழ்ந்த அந்நாள்

தேன்தோன் றியதுபோல மக்கள் நாவில்

செந்தமிழே நீ தோன்றி வளர்ந்தாய்! வாழி !

எனப்பாடும் போதினிலே இயற்கை கொண்ட ஐம்பூதம் மகிழ்ச்சியுற தமிழும் ஆர்க்கும்!

ஆம்! இயற்கையைப் பாடுகின்றான் வாணிதாசன் என்கின்ற பொழுது, அங்கே

தமிழ் மணக்கிறது

இயற்கை மணக்கிறது

இனிமை தவழ்கிறது

எழுத்துக்கள் விளையாடுகின்றன! படிப்பவர்கள் திளைக்கின்றனர்!

இன்னுமொரு கவிதையிலே புதுவையைப் பாடுகின்ற போது,

''கார்பாயும் வான், கரைபாயும் நீலநிறச்

சீரார் கடற்பரப்புச் சென்று தழுவுகின்ற

மன்றல் மணிமாடத் தொடுவான் மணவறைக்குத்

தென்றல் மணம்பரப்பும் செடிகொடிகள் பாட்டிசைக்கும்

நெய்தற் கரைகள் நீண்ட முழவார்க்கும்

வெய்யோன் வரவை விடிவெள்ளி முன்னுரைக்கும்

எழில் நிறைந்த வானில் எழும்பரிதி போல

பழகுதமிழ் நாட்டு பண்பார் புதுவை''

எனப்பாடிக்களிக்கிறான்.

அலைபாயும் கடலோரம்

அணியாகும் புதுவையின்

இயற்கை எழிலோடு

இன்பத் தமிழ் சேர்த்து

எழுத்தில் வடிக்கின்றான் இயற்கவிஞன் வாணிதாசன்!

இயற்கையினைப் பாடியவர்

எண்ணிறந்தோர்! என்றாலும்

இவன்பாட்டு வேறுவிதம்

எஞ்ஞான்றும் புல்லரிக்கும்

இனிய நடை எளிய நடை!

ஆற்றொழுக்காய் ஓடிவரும்

அழகுதமிழ்ப் பழகுநடை!

மலைநாட்டை, குறிஞ்சியினை மனமாரப் பாடுங்கால்,

'' உச்சி மலையின் ஒருபுறத்தில் தேனடையில்

நாவற்பழ வண்டு நல்யாழ் இசைத்திருக்கும்

வேரிற்பழுத்த பலாதூக்கும் மந்தியெலாம்

சேர முழவோசை சேர்க்க வருவோராம்!

மயிலோடு பாறை மகளிர் கலைமன்றம்!''

*என்றும் அழியா இயற்கையின் பேரழகு குன்றாக் குறிஞ்சி!*

*“ கொல்லைப் புதரெல்லாம்*

*குக்குக்கூ என்று குயில்*

*வல்லார் தமிழை வழங்கி வரவேற்கும்*

*பச்சை மரத்தில் பசுந்தழைக் கொம்பிருந்து*

*கிச்சுக் கிச்சென்னும் கிளிப்பிள்ளை புறவு*

*பறந்து பறந்து பகலெல்லாம் சுற்றி*

*இறைந்த தினையை எடுத்தேகும் கூட்டிற்கே!*

*கூனல் மரமேறிக் கொத்துக் கொத்தாய் மலரை*

*வானுக் களிக்கவரும் மலர்க்கொடிகள்*

*ஆட்டின் மணியோசை ஆயன் குழலோசை*

*காட்டில் எதிரொலிக்கும் காதுக்கோ பேரின்பம்*

*கொல்லை வரகும் குளிர்தயிரும் எந்நாளும்*

*முல்லை நிலத்தின் முதலென்பான்!”*

*நஞ்சை வயற்காட்டை நாவினிக்கப் பாடுபவன்....*

*“வாழைக் குலையீன்று மாவின்மேல் சாய்ந்திருக்கும்*

*கூழைப்பலா தென்னை குளத்தோரம் காட்டில்தவழ்*

*வேழச் செவிபோல் விரியும் மரையிலைகள்*

*வாழ்வளிக்கும் இல்லத்து மாமணியாம் மங்கைபோல்*

*நீண்டிருக்கும் காம்பில் நிறைந்திருக்கும் தாமரைப் பூ*

*கூண்டுக்கருகில் குரல் கொடுக்கும் சிட்டினங்கள்*

*கிள்ளை சிறகடிக்கும் கீழ்வானத் தோற்றம் போல்*

*பள்ளத்தே தேங்கும் நீர் பாட்டிசைக்கும் கால்களெல்லாம்*

*நாளும் உணவளிக்கும் நன்செய் மருதநிலம் “.*

*எனக்கூறி, கடற்கரையை நெய்தல் நிலப்பரப்பை நெஞ்சாரப் பாடுகிறான்!*

*“பொன்னைப்போல் பூத்த*

*புதர்த்தாழை புன்னையிலே*

*சின்னக் குருகிருக்கும் சீறும் கடலலைகள்*

*நண்டோடிப் பாயும்!*

*நடுக்கடலின் மீன்வளத்தைக் கொண்டுவரும் கட்டுமரம்!*

*நீலக்கடல் மேல் நெளிந்தாடும் பாய்மரங்கள்*

*பாயும் கடலலையின் பக்கத்து மேட்டினிலே*

*காயும் கருவாடு! காக்கைகள் வட்டமிடும்*

*ஓயா அலைகளோ ஊரிரைச்சல் போலிருக்கும்*

*வேயாத வீட்டு வெளியெலாம் கன்னிவலை*

*வீசிக் கிடக்கும் விலைபோகும் மீன் உடை*

*ஓசை உயர் நெய்தலே! “*

*எனக்கூறும் வாணிதாசன், நானிலத்தின் பெருமையினை நற்றமிழில் பாடிடுங்கால் இயற்கை உளங்களிக்க பவனிவரும் அவன் கவிதை படிப்போரின் நெஞ்சினிக்கும்!*

*விரிந்தவான் வெளியே! சுற்றும்*

*விரிகதிர் ஒளியே! என்னை*

*நள்ளிராப் பொழுதில் வந்து*

*நலம் கேட்கும் நிலவே! வானில்*

*நறுமணக் கலவை ஏந்தி*

*நாடிடும் வாசக்காற்றே!*

*கவிதைக்குக் கருவை ஏந்தி*

*கானத்தில் கேட்கப் பாடும்*

*கருங்குயில் பேடே, ஆடும்*

*அலைகளைத் தேக்கித் தேக்கி*

*ஆசைக்கும் அடக்கம் காட்டும்*
*நீலநீர்ப் பரப்பே, பச்சைச்*
*சோலையே! சொக்கும் வண்ண*
*சுந்தரக் காட்சியேந்தும்*
*மாயமே! மலரே ஆடும்*
*செடி கொடி மரமே! சொர்க்கப்*
*பூமியே, உயர்ந்த போதும்*
*அடக்கத்தில் அமைதி காக்கும்*
*அழகேந்தும் மலையே! பாடி*
*ஆடியே ஓடும் வானப்*
*புட்களே நீங்களெல்லாம்*
*பாரதி சொன்ன தைப்போல்*
*“ சொற்பனந்தாளோ பல*
*தோற்ற மயக்கங்களோ?*
*அற்ப மாயைகளோ? உம்முள்*
*ஆழ்ந்த பொருளிலையோ?*
*உங்களைப் பாடிப்பாடி*
*உழன்றிடும் எங்கள் கூட்டம்*
*பைத்தியந் தானே? எங்கள்*
*பாடல்கள் வீணோ? உங்கள்*
*பூரிப்பை நாங்கள் காண*
*புதுப்பாடல் நாளும் செய்வோம்!*
*எங்களைப் பூரிப்பாக்க...*
*எப்போதும் போலே நீங்கள்*
*எங்களைச் சூழ்ந்திடுங்கள்*
*இணைந்தொன்றாய் வாழ்வோம் என்றும்!*

# சந்திரோதயம் பதிப்பகம், மதுரை

**3/422, Thiruvalluvar Street,**
**Dinamani Nagar, Madurai 625 018.**
**Mob: +91 7010997639**

| | நூல்கள் | விலை (Rs.) |
|---|---|---|
| 1. | திருவிளையாடல் புராணக் கதைகள் (எளிய உரைநடையில்) | 200 |

**கவிஞர் முத்தமிழ் விரும்பியின் கவிதை நூல்கள்**

| | | |
|---|---|---|
| 1. | உன்னோடு உரையாடுதல் | 100 |
| 2. | காதல் மொழி | 200 |
| 3. | பார்வையில் பூத்த நிலா | 100 |
| 4. | தேனடையும் வரலாறு | 100 |
| 5. | நுண்கலை மருத்துவன் | 200 |
| 6. | தொடரும் புழுதிக்கால்கள் | 100 |

**முனைவர் செ. இராஜேஸ்வரியின்**

**எம்.ஜி.ஆர். பற்றிய நூல்கள்**

| | | |
|---|---|---|
| 1. | வெற்றித்திருமகன் எம்.ஜி.ஆர். | 200 |
| 2. | எம்.ஜி.ஆர். நிழல் நிஜம் நிரந்தரம் | 200 |
| 3. | சிக்கு மங்கு சிக்கு மங்கு சச்ச பப்பா (எம்.ஜி.ஆர். கற்பிக்கும் குழந்தை வளர்ப்பு முறைகள்) | 200 |
| 4. | வீரமகன் போராட வெற்றி மகள் பூச்சூட | 200 |
| 5. | மகளிர் போற்றும் மக்கள் தலைவர் எம்.ஜி.ஆர். | 200 |
| 6. | எம்.ஜி.ஆர். ஒரு ஜீவ நதி | 200 |
| 7. | எம்.ஜி.ஆர். ஒரு கலியுகப்போராளி | 200 |
| 8. | ஒளி விளக்கு எம்.ஜி.ஆர். | 200 |
| 9. | வெற்றிப் படிக்கட்டில் நாடோடி மன்னன் – I | 200 |
| 10. | நீங்க நல்லா இருக்கணும் [எம்.ஜி.ஆரின் திரைப்படப் பாடல்கள் -I] | 200 |
| 11. | பாட்டுடைத் தலைவன் எம்.ஜி.ஆர். [எம்.ஜி.ஆரின் திரைப்படப் பாடல்கள் - II] | 200 |
| 12. | இரசிகர்களின் இதய தெய்வம் எம்.ஜி.ஆர். | 200 |
| 13. | முத்தமிழ்க் காவியம் மதுரை வீரன் | 200 |
| 14. | இரட்டை வேடத்தில் ஜொலிக்கும் எம்.ஜி.ஆர். | 200 |
| 15. | எம்.ஜி.ஆர். படங்களில் அறிவியல் புனைவு | 200 |
| 16. | படகோட்டி, மீனவ நண்பன் ஓர் ஒப்பீடு | 200 |
| 17. | Unique Fandom of MGR | 200 |
| 18. | எம்.ஜி.ஆர். படங்களில் தொழில் தர்மம் | 200 |
| 19. | எம்ஜிஆர் படத்தில்சண்டைக்காட்சிகளின்சுவாரஸ்யங்கள்–I | 200 |
| 20. | எங்க வீட்டுப்பிள்ளை | 200 |

21. எம்.ஜி.ஆர். வீடும் விருந்தும் 200

**முனைவர் சந்திரிகா சுப்பிரமணியன் நூல்கள்**

1. தலைமை பொறுப்பேற்கலாம் 120
2. இணையத் தமிழ் 150
3. ஊடகச் சட்டங்கள் 250
4. ஆஸ்திரேலியாவில் அருந்தமிழ் 200
5. கொசு வீட்டில் பாயாசம் (சிறுவர் நூல்) 200
6. மாயோன் வீட்டுத் தோட்டத்தில் (சிறுவர் நூல்) 200

**முனைவர் செ. இராஜேஸ்வரியின்**
**சமூகப்பண்பாட்டு ஆய்வு நூல்கள்**

1. பண்பாட்டு நகர்வுகள் – தமிழ் நாட்டில் இருந்து ஜப்பானுக்கு 200
2. பெண் தெய்வ வழிபாடு 200
3. தேவேந்திரன் 200
4. மருதநிலப் பெண் தெய்வங்கள் (வராகி, பிடாரி, தவ்வை) 200
5. இரு நிலத்தில் திருமுருகன் 200
6. முன்னோர் வழிபாடு (கதிரவன், காலதேவன், நாகர் வழிபாடும்) 200
7. வேளாண்மரபில் விதைப்பும் பூப்பும் 200
8. யானைக்கடவுள் 200
9. பெண் பூப்பின் புனித வழிபாடு 200

## முனைவர் செ. இராஜேஸ்வரியின்

**கவிதைத் திறனாய்வு நூல்கள்**

1. பாடுபொருளும் பாசப்பொருளும் 250
2. “பூ மர நிழலி”ன் களமும் காலமும் 200
3. “2020 தைமாதத்தில் இன்று” கவிதையில் அடிக்கருத்தியல் ஆய்வு 100
4. கவிஞர் முத்தமிழ் விரும்பியின் **கவிதையில் காதல்** 100
5. கவிஞர் முத்தமிழ் விரும்பியின் பயணக் கவிதைகள் 200

## ஆங்கிலக் கவிதைகளின் தமிழ் மொழி பெயர்ப்பு

**முனைவர் செ. இராஜேஸ்வரி**

1. எட்டுத்திக் கும் செல்வீர் 200
2. அவன் கடவுளுக்கு நிகரானவன் 200
3. செக்கச் சிவந்த ரோஜா 200
4. கலீல் ஜிப்ரா னின் “மணலும் நுரையும்” 200
5. கலீல் ஜிப்ரானின் “பாடல்கள் 14” 200

## Tamil Classics in English – (Dr. C. Rajeswari)

1. Kurunthokai 200
2. Agananooru 200
3. Purananooru 200
4. Naaladiyaar 200
5. Aasaarakkovai 200

| | | |
|---|---|---|
| *6.* | A Predictress from the Hill (Thiru Kutrala Kuravanchi) | 200 |
| *7.* | A Peasant with two Wives (Mukkudal pallu) | 200 |
| *8.* | Thiru Kutraala Kuravanji | 200 |

**Socio Cultural Study Series**

| | | |
|---|---|---|
| *1.* | Lord Indra – The Forgotten Diet | *300* |
| *2.* | Serpent – The Primordial God | *300* |

***தற்காலத் தமிழில் சங்க இலக்கிய நூல் வரிசை***

| | | |
|---|---|---|
| *1.* | *குறுந்தொகைக் கவிதைகள்* | *200* |

***மொழிபெயர்ப்பு ஆய்வு நூல்கள் – முனைவர் செ. இராஜேஸ்வரி***

| | | |
|---|---|---|
| *1.* | *மொழிபெயர்ப்பியல் ஆய்வு (ஆய்வு நூல்)* | *200* |
| *2.* | *கவிதை மொழிபெயர்ப்பு* | *200* |
| *3.* | *நவீன மொழிபெயர்ப்பு உத்திகள் (Co-author)* | *200* |
| *4.* | *மொழிபெயர்ப்பில் பெயரும், பொருளும்* | *200* |

***தமிழ் இலக்கண நூல்***

| | | |
|---|---|---|
| *1.* | *தமிழில் வேற்றுமை உருபுகள்* | *200* |

***சிறு கதை, கவிதை***

| | | |
|---|---|---|
| *1.* | *அமராவதியின் காதல் - சத்யப்பிரபா* | *200* |
| ***2.*** | *ரோஜா மொட்டு (சித்திரக் கவிதைகள்) - சத்யப்பிரபா* | *200* |

***மாத இதழ்கள்***

| | | |
|---|---|---|
| *1.* | *தமிழணங்கு மாத இதழ்* | *200* |
| *2.* | *Love Thamizh* | *500* |

***பேராசிரியர் முனைவர் தே. ஞானசேகரனின் நூல்கள்***
***ஆங்கிலத்தில் – முனைவர் செ. இராஜேஸ்வரி***

**Moonstone Publication, Madurai**

| | | |
|---|---|---|
| 1. | Emerging Mallarism | 200 |
| 2. | Festival of lord Indra | 200 |
| 3. | Role of Devendirar's in Indian war of Independence (Sundaralingam Kudumbanar) | 200 |
| 4. | Re reading of Pallu literature | 200 |
| 5. | Mallariyan Literature | 200 |
| 6. | Frontyard without My Dad (Poem) | 200 |

**Poems of Er.Poet Muththamizh Virumbi - In English Dr. C. Rajeswari**

**[Moonstone Publication]**

| | | |
|---|---|---|
| 1. | Therapist of the Finest Art | 200 |
| 2. | Following Dusty Feet | 200 |

**Other Books**

| | | |
|---|---|---|
| *1.* | Concepts of Constitution - Dr.S. Kalai Arasu | 300 |
| *2.* | Aranyani By Vijeni (English Novel Part I & Part II) | 200 |

*தமிழணங்கு மாத இதழை வெளியிடுவோர்: இ. சதீஷ் ராஜ்குமார் (அட்வகேட்), இயக்குனர், சந்திரோதயம் அறக்கட்டளை, 3/422, தினமணி நகர், மதுரை 625 018, Ph: +91 7871123226*